








# நீங்கள் எங்கிருந்தாலும்...

# ஹிமாலயா புக்கே ஸ்னோ

## உபயோகியுங்கள்.

**ஏனென்றால் இது பிரத்தியேகமாக இந்தியாவின் சீதோஷ்ணத்திற்கேற்ப தயாரிக்கப்பட்டது**

சீதோஷ்ண நிலை எப்படி இருந்தாலும்—இந்தியாவில் நீங்கள் எங்கிருந்தாலும், ஹிமாலயா புக்கே ஸ்னோ உங்கள் சருமத்தை அதிக மிருதுவாகவும், அழகாகவும் வைத்துக்கொள்கிறது. இதன் நறுமணத்தை நீங்கள் மிகவும் விரும்புவீர்கள்.

இன்னுமொரு நேர்த்தியான **இராஸ்மிக்** தயாரிப்பு

MBS. 6-X 19 TM

இராஸ்மிக் கம். லிட்., லண்டனுக்காக இந்தியாவில் தயாரித்தது.




# பொருளடக்கம்

மலர் 11 இதழ் 39 | 1952 ஏப்ரல் 27 | நந்தன ஆ சித்திரை 15



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

# ஜூபிடர்

தயாரிப்பு



ஏப்ரல்

26௳ முதல்

# ராணி

சென்னை

பாரகன்

ஸ்ரீ கிருஷ்ணா

&

சயானி



மே 1௳ முதல்

தென்னாடெங்கும்

ஆரம்பம்....



டைரக்ஷன்: **பிரசாத்**... ஸ்டுடியோ: சென்ட்ரல்... நெப்ட்யூன்...



கல்கி

மலர் 11 | தமிழ்த் திருநாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் | இதழ் 39

# சிங்களத்தீவிலே சத்தியப் போர்

இலங்கை உலகத்தின் கவனத்தைக் கவரப் பார்க்கிறது.

உலகத்தின் கவனத்தைக் கவர்வதற்குப் பல முறைகள் உண்டு.

அதிசயமான தார்மிகச் செயல்மூலம் உலகத்தின் கவனத்தைக் கவரலாம்.

வீரதீரச் செயல்களின் மூலம் உலகத்தின் கவனத்தைக் கவரலாம்.

திடீர் யுத்தம் தொடங்கி உலகத்தைத் தூக்கிவாரிப் போடச் செய்யலாம்.

தென்னாப்பிரிக்கா சர்க்காரைப் போல் காட்டுமிராண்டிச் செயல் மூலம் உலகத்தின் கவனத்தைக் கவரலாம்.

இலங்கையும் உலகத்தின் கவனத்தைக் கவரப் பார்க்கிறது. எந்த முறையில் கவரப் பார்க்கிறது என்பதுதான் இப்போது கேள்வி.

*     *     *     *

சில தினங்களுக்கு முன் இலங்கைப் பிரதமர் பதவியை ஏற்றுக் கொண்ட ஸ்ரீ டட்லி சேனநாயகா ஜனநாயக தர்மத்தில் தமக்குள்ள அக்கறையை ஐயந்திரிபுக்கு இடமின்றி விளக்கிக் கூறினார்.

"இந்த நாட்டில் உள்ளவர்கள் எந்த மதத்தை அனுஷ்டிப்பவராயினும், எந்தச் சமூகத்தைச் சேர்ந்தவராயினும், எந்த மொழியைப் பேசுபவராயினும் அவர்கள் யாவரும் சமமாகவே கருதப்படுவார்கள். இங்கு அவர்கள் எல்லோரும் சிறிதும் ஏற்றத் தாழ்வின்றி வாழலாம்" என்று புதிய பிரதமர் உறுதி கூறினார்.

ஆனால் ஸ்ரீ டட்லி சேனநாயகா அவ்விதம் கூறிய சில தினங்களுக்குள்ளேயே அந்த நாட்டில் வாழும் லட்சக்கணக்கான இந்தியர்களை அரசியல் அநாதைகளாக்கும் ஒரு முறையைக் கையாள முற்பட்டு விட்டார்!

அதாவது புதிய பிரதமரின் அறிவிப்புக்கு இணங்க அங்கு நடக்கப் போகும் பொதுத் தேர்தலில், மாபெரும் இந்தியர் சமூகத்தைச் சேர்ந்த ஒரு பிரதிநிதிகூட இலங்கைப் பார்லிமெண்டில் இடம் பெற முடியாது.

எட்டு லட்சத்துக்கு மேற்பட்ட மகாஜனங்கள் அடங்கிய இந்திய சமூகம் தனது ஜீவாதார உரிமை பறிபோவதை எவ்வாறு சகித்துக் கொண்டிருக்க முடியும்?

மேற்படி அநீதியை எதிர்த்து இலங்கை இந்தியர்கள் சென்ற பல ஆண்டுகளாகத் தர்ம நியாயமாகப் போராடி வந்தார்கள். இலங்கை சர்க்காரைத் திருப்தி செய்ய எவ்வளவோ பாடுபட்டார்கள். இலங்கை சர்க்காரின் அநீதியைக் கண்டிப்பதற்கு அறிகுறியாகத் தங்களை இலங்கைப் பிரஜைகளாகப் பதிவு செய்து கொள்வதில்லை என்று பகிஷ்காரம் செய்திருந்தார்கள். பிறகு இலங்கை சர்க்காருடன் சமரசமாகப் போகவேண்டும் என்ற உத்தேசத்துடன் மேற்படி பகிஷ்காரத்தை வாபஸ் செய்து அவர்களுடன் ஒத்துழைக்க முன் வந்தார்கள்.

அந்தச் சந்தர்ப்பத்தையாவது உபயோகப்படுத்திக் கொண்டு இலங்கை சர்க்கார் தங்கள் தவறைத் திருத்திக் கொண்டிருக்கலாம்.

ஆனால் எதற்கும் இலங்கை சர்க்காரின் மனம் கரையவில்லை.

நாகரிகமடைந்த உலகத்தின் பகுதிகளிலெல்லாம் மக்களின் ஜீவாதார உரிமைகள் அதிகமாகிவரும் இந் நாளில், இலங்கை சர்க்கார் அங்கே வசிக்கும் எட்டு லட்சம் இந்தியர்கள் பல வருஷ காலமாக அநுபவித்து வந்த ஓட்டுரிமையை முற்றிலும் பறித்து விட்டார்கள்.

பறித்துவிட்டு, அது சம்பந்தமான விவகாரம் முடிவதற்குள்ளே, அவசர அவசரமாகப் பொதுத் தேர்தல் நடத்த முன்வந்திருக்கிறார்கள்.

இந்தியாவில் என்றைக்கும் வோட்டுரிமை இல்லாதவர்களாயிருந்த கோடானு கோடி ஜனங்களுக்கு நேரு சர்க்கார் வோட்டுரிமை கொடுத்துச் சமீபத்தில் பொதுத்

தேர்தல் நடத்தினார்கள். இந்த ஜனநாயக அற்புதத்தைக் கண்டு உலகமே வியந்தது.

இலங்கையில் வோட்டுரிமையை இருபது வருஷ காலமாக அநுபவித்து வந்த எட்டு லட்சம் இந்தியர்களிடமிருந்து அந்த உரிமை பிடுங்கப்பட்டிருக்கிறது. பிடுங்கப்பட்டு, பொதுத் தேர்தல் நடக்கப் போகிறது. இந்த விந்தையைக் கண்டும் உலகம் வியக்கிறது.

இத்தகைய நிலையில் தங்களுடைய ஜீவாதார உரிமையை ஸ்தாபிப்பதற்காக காந்தி மகான் வகுத்த சாத்வீக சத்தியாக்கிரக முறையைக் கடைப்பிடிக்க வேண்டுமென்று இலங்கை இந்தியர்கள் முடிவு செய்திருக்கிறார்கள்.

சென்ற வாரம் இலங்கையில் இலங்கை இந்தியர் காங்கிரஸ் மகாசபை நடந்தது. இவ்வாண்டில் இலங்கை இந்தியருக்கு நேர்ந்திருக்கும் நெருக்கடியான நிலைமையை உணர்ந்து, இந்தியர்களின் முதுபெரும் தலைவரான ஸ்ரீ பெரிசுந்தரத்தை இலங்கை இந்தியக் காங்கிரஸ் தலைவராகத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள். ஸ்ரீ பெரிசுந்தரம் தமது தலைமை உரையில் இந்தியர்களின் கடமையை வற்புறுத்திக் கூறியுள்ளார்.

"இந்தியர்களுக்குப் பிரதிநிதித்வம் அளிக்காமல் ஏற்படும் இலங்கைப் பார்லிமெண்டை ஜனநாயக ஸ்தாபனம் என்று சொல்ல முடியாது. எனவே வரப் போகும் தேர்தல்களுக்கு முன் நமது நியாயமான உரிமைகளை ஸ்தாபிக்கத் தகுந்த முறைகளைக் கைக்கொண்டு தீர வேண்டும்."

இவ்வாறு ஸ்ரீ பெரிசுந்தரம் கூறியதற்கிணங்க, இந்தியர்கள் தங்களுடைய உரிமைகளைப் பெற அஹிம்சைப் போரை ஆரம்பிக்க வேண்டும் என்று நாலாயிரம் பிரதிநிதிகள் விஜயம் செய்திருந்த இலங்கை இந்தியர் காங்கிரஸ் மகா சபைக் கூட்டம் தீர்மானித்திருக்கிறது.

இலங்கை சர்க்காரின் போக்கை மற்ற இலங்கை இந்தியத் தலைவர்களும் ஒருமுகமாகக் கண்டித்திருக்கிறார்கள்.

"இலங்கையில் ஸ்தாபித்துள்ள இந்தியர்களின் வாழ்க்கைச் சரித்திரத்தில் இப்போது மிகவும் நெருக்கடியான கட்டம் ஏற்பட்டிருக்கிறது. நம்முடைய எதிர்கால விதி இந்தக் கட்டத்தில் நாம் செய்துள்ள தீர்மானத்தையே பொறுத்திருக்கிறது. இலங்கையின் பிரஜைகளான இந்தியர்களின் உரிமைகள் சென்ற பன்னிரண்டு வருஷ காலத்தில் சிறிது சிறிதாக அபகரிக்கப்பட்டு விட்டன. மேற்படி உரிமைகளை மறுபடியும் பெறுவதற்கு நாம் சமாதான முறையில் என்னவெல்லாம் செய்ய முடியுமோ அதையெல்லாம் செய்து பார்த்தாகி விட்டது. அவற்றால் யாதொரு பலனும் ஏற்படவில்லை. எனவே, இலங்கை சர்க்காருக்கு ஞானோதயம் ஏற்படும்படி செய்வதற்கு சத்தியாக்கிரகப் போரைத் தவிர வேறு வழி எதுவும் இல்லை" என்று ஸ்ரீ தொண்டமான் கூறியுள்ளார்.

"பிரஜா உரிமைக்காக 2,35,000 இலங்கை இந்தியர்கள் மனுப்போட்டிருக்கின்றனர். ஆனால் மேற்படி மனுக்களைப் பரிசீலனை செய்யும் ரிஜிஸ்ட்ரேஷன் கமிஷனர் நத்தை வேகத்தில் சென்று வருகிறார். தர்ம நியாயமான உரிமையைப் பெறுவதற்காக கடந்த பத்து ஆண்டுகளாக நாம் பேசிப் பேசிச் சலித்து விட்டோம். செயலில் இறங்க வேண்டிய சமயம் இப்போது வந்திருக்கிறது. இலங்கை அரசாங்கத்தினிடமிருந்து நமக்கு நீதி கிடைக்காவிட்டாலும் ஆண்டவனிடமிருந்து நீதி கிடைக்கும் என்பது நிச்சயம்" என்று பல ஆண்டுகளாக இலங்கை இந்தியர் காங்கிரஸ் தலைவராக இருந்து தொண்டு புரிந்துள்ள ஸ்ரீ ராஜலிங்கம் முழங்கியிருக்கிறார்.

## இந்தக் கப்பல் இரும்புக் கப்பல்!



# அவரால் முடிந்தது!




சென்னைத் தண்ணீர்ப் பஞ்சத்தைத் தீர்க்க இரண்டு திட்டங்கள் பரிசீலனையிலிருப்பதாகவும், ஆனால் தற்சமயத்தில் தம்மால் முடிந்த அளவு தண்ணீர் அளிக்க முயற்சி செய்வதாகவும் சென்னைக் கார்ப்பொரேஷன் கமிஷனர் கூறினார்.

---

பெண்களும் சத்தியாக்கிரகப் போரில் தீவிரமாக ஈடுபட வேண்டும் என்று இலங்கை இந்தியப் பெண்மணிகள் மகாநாடு முடிவு செய்திருக்கிறது.

இவ்விதமாக இலங்கை சர்க்காரின் செய்கை அந்த நாட்டில் ஒரு மகத்தான சூறாவளியைச் சிருஷ்டி செய்திருக்கிறது.

அந்தச் சூறாவளியைச் சமாளிக்க இலங்கை சர்க்கார் என்ன செய்யப் போகிறார்கள்!

இலங்கை இந்தியர்கள் தங்களுடைய உரிமைகளை ஸ்தாபிக்க பலாத்காரப் போரில் ஈடுபடுவார்களாயின், அதை இலங்கை சர்க்கார் எளிதில் அடக்கி விடலாம்.

ஆனால் காந்தி மகான் காட்டிய வழியைப் பின்பற்றி அவர்கள் ஆரம்பிக்க விருக்கும் சத்தியப் போரைச் சமாளிப்பது சுலபமான காரியம் அல்ல.

தென்னாப்பிரிக்காவில் பிரஜா உரிமை சம்பந்தமாகத் தகராறு ஏற்பட் டிருப்பதையும், அதன் காரணமாகத் தென்னாப்பிரிக்க சர்க்கார் உலகத்தின் கண்டனத்துக்கு ஆளாகி யிருப்பதையும் இலங்கை சர்க்கார் கவனிக்க வேண்டும்.

நிற வெறியர்கள் அடங்கிய தென்னாப்பிரிக்க சர்க்கார் உலகத்தின் நன்மதிப்பைத் துச்சமாக எண்ணலாம். ஆனால் ஜனநாயக வாதிகள் அடங்கிய இலங்கை சர்க்கார் இந்தியாவின் நட்பையும் உலகத்தின் நன்மதிப்பையும் துச்சமாகக் கருதத் துணிவார்களா!

மாபெரும் புகழ்பெற்ற தந்தையின் ஸ்தானத்தில் இலங்கைப் பிரதமராக வந்திருக்கும் ஸ்ரீ டட்லி சேனநாயகா, தாம் பதவிக்கு வந்ததும் முதல் முதலாக இந்த அநீதமான காரியத்தைச் செய்ய வேண்டுமா! ஜனநாயகத்தைக் கொலை செய்யும் இத்தகைய செயலைப் புரிந்து நாகரிக உலகின் ஒருமித்த கண்டனத்துக்கு ஸ்ரீ டட்லி சேனநாயகா உள்ளாக வேண்டுமா!

கடைசியாக, ஸ்ரீ எஸ். தொண்டமான், ஸ்ரீ கே. ராஜலிங்கம், ஸ்ரீ ஏ. அஸீஸ், ஸ்ரீ கே. ஜி. எஸ். நாயர் முதலிய தலைவர்கள் அடங்கிய தூது கோஷ்டி பிரதமரைப் பேட்டி கண்டு இந்தியர்களின் நிலைமையையும் இலங்கை இந்தியர் காங்கிரஸ் நிறைவேற்றியுள்ள தீர்மானத்தையும் விளக்கிக் கூறி யிருக்கிறார்கள்.

புதிய வாக்காளர் ஜாபிதாவில் இந்தியர்களுடைய பெயர்களைச் சேர்ப்பதற்குச் சட்டம் குறுக்கே நிற்பதாகப் பிரதமர் அவர்களிடம் கூறியதாய்த் தெரிகிறது. எட்டு லட்சம் இந்தியர்களின் வாக்குரிமையைப் பறிக்கும் விஷயத்தில் இலங்கை சர்க்காருக்குத் தடையாக எதுவும் இருக்கவில்லை. அப்படி யிருக்க அவர்களில் ஒரு பகுதியினருக்கு, பறித்த வாக்குரிமையை மீண்டும் அளிப்பதற்குச் சட்டம் முட்டுக் கட்டையாக இருப்பதாய் இலங்கைப் பிரதமர் கூறுவது விசித்திரமான வாதமாக இருக்கிறது.

அங்கு சட்டங்களைச் சிருஷ்டிப்பவர்கள் இலங்கை சர்க்காரேயன்றி, சட்டங்கள் இலங்கை சர்க்காரைச் சிருஷ்டிப்பதில்லை.

எனவே சட்டம் என்ற உயிரற்ற ஜடப்பொருளின் மீது பாரத்தைப் போடாமல் இலங்கைப் பிரதமர் அங்குள்ள இந்தியர்களுக்கு நீதி வழங்க முன்வர வேண்டும்.

நிலைமை கட்டுக்கடங்காமல் மீறி, வெள்ளம் தலைக்கு மேலே போவதற்குள், இலங்கைப் பிரதமர் விழித்துக் கொண்டு எட்டு லட்சம் இந்தியர்களின் பறிக்கப்பட்ட உரிமையைத் திரும்ப அளித்து விடுவார் என்று எதிர்பார்ப்போமாக.

# தனித் தலைவர் பி. டி. ராஜன்

இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு செந்தமிழ் நாட்டில் ஓர் அதிசயமான திக் விஜயம் நடந்தது. மிக மிகச் சக்தி வாய்ந்த சபரிமலை ஐயப்பன் என்னும் தெய்வம் தமிழ் நாட்டில் பல இடங்களிலும் பவனி வந்தது. சபரிமலை ஐயப்பனைத் தமிழகத்தில் நவாப் ராஜமாணிக்கம் தமது நாடகத்தின் மூலம் பிரபலப்படுத்தினார். ஐயப்பனின் பவனியை உத்தம பாளையம் பி. டி. ராஜன் முன்னின்று நடத்தி வைத்தார். ஐயப்பன் சென்ற இடத்துக்கெல்லாம் அவரும் பயபக்தியுடன் சென்றார். பவனி சம்பந்தமான சகல ஏற்பாடுகளையும் தாமே கவனித்துச் செய்தார். "சுவாமி சரணம் ஐயப்பா!" என்னும் கோஷத்தைக் கிளப்பி நாடெங்கும் ஆயிரக் கணக்கான குரலில் அந்தக் கோஷம் எதிரொலி செய்யும்படி பண்ணினார்.

"இது என்ன! ஜஸ்டிஸ் கட்சித் தலைவரான திரு பி. டி. ராஜன் இப்படிப் பகுத்தறிவு குன்றிக் குருட்டு நம்பிக்கையில் விழுந்து விட்டாரே!" என்று சிலர் அதிசயப்பட்டார்கள்.

பிறகு, நடந்திருப்பதைப் பாருங்கள். சென்ற பொதுத் தேர்தலில் ஜஸ்டிஸ் கட்சியின் பெயரால் நிற்பதற்குப் பலரும் அஞ்சினார்கள். பழுத்த ஜஸ்டிஸ் கட்சிக்காரர்கள் வேறு புதுக் கட்சியின் பெயர் வைத்துக் கொண்டு நின்றார்கள்.

ஜஸ்டிஸ் கட்சியின் பெயரால் துணிந்து தேர்தலுக்கு நின்றவர்கள், ஒரு கை விரல்களில் எண்ணிவிடக் கூடியவர்கள். அவர்களிலே வெற்றியடைந்தவர் ஒரே ஒருவர். அந்தத் தனி ஒருவர் தான் ஸ்ரீ பி. டி. ராஜன்.

மதுரை நகர்த் தொகுதியில் ஸ்ரீ பி. டி. ராஜன் தோல்வியடைந்த செய்தி வந்தபோது அநேகர் "ஐயப்பன் கை விட்டுவிட்டாரே!" என்று ஏளனம் செய்தார்கள். அவர்கள் பிறகு ஏமாந்தார்கள். ஐயப்பன் மதுரையில் தம் பக்தனைச் சோதனை செய்தார். அந்தச் சோதனையில் பக்தனுடைய மனம் சலிக்கவில்லையென்று கண்டார். கம்பம் தொகுதியில் வெற்றி அளித்தார்.

அதன் பலனாக, முன்னூற்றெழுபத்தைந்து அங்கத்தினர் அடங்கிய சென்னைச் சட்ட சபையில் ஜஸ்டிஸ் கட்சியின் ஏக பிரதிநிதியாகவும், அந்தக் கட்சியின் போட்டியில்லாத தனிப் பெருந் தலைவராகவும் இன்று ஸ்ரீ பி. டி. ராஜன் விளங்குகிறார்.

* * *

மானிட வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள் உலகில் சாதித்திருக்கும் அற்புதமான காரியங்கள் எல்லாம் நம்பிக்கையின் மூலமாகவே சாதிக்கப்பட்டிருக்கின்றன.

அந்த நம்பிக்கை பல வகையான ரூபங் கொண்டிருக்கலாம்.

சிலர் தெய்வத்தினிடம் நம்பிக்கை வைத்து அரும்பெரும் காரியங்களைச் சாதிக்கிறார்கள்.

சிலர் "அன்பே தெய்வம்" என்று நம்பி அரிய பணிகளைச் செய்கிறார்கள்.

சிலர் சத்தியத்திலும் அஹிம்சையிலும் அசையா நம்பிக்கை கொண்டு, நடவாத காரியங்களையும் நடத்தி வைக்கிறார்கள்.

வேறு சிலர் மாஸ்கோவிலுள்ள தோழர் ஸ்டாலினை தெய்வம் என்று நம்பி, அந்த நம்பிக்கையினால் ஆவேசம் கொண்டு அரிய செயல்களைப் புரிகிறார்கள்.

ஹிட்லரைப் போன்ற வெறியர்களுங் கூடத் தங்களுடைய சொந்த 'அவதார சக்தி'யிலுள்ள நம்பிக்கையினால்தான் பெரிய காரியங்களைச் சாதித்திருக்கிறார்கள்.

இன்னும் சிலர் 'பணமே தெய்வம்' என்ற நம்பிக்கையினாலும் பல பெரிய காரியங்களைச் செய்து விடுகிறார்கள்.

எப்படியோ, மனிதன் வளர்வதற்கும் அரிய காரியங்களைச் சாதிப்பதற்கும் நம்பிக்கை அவசியம் தேவையாயிருக்கிறது.

கடவுளிடம் வைக்கும் நம்பிக்கைதான் ஆயிரமாயிரம் ஆண்டுகளாகக் கையாண்டு பார்த்துக் கைகண்ட பலன் அளிக்கக் கூடிய நம்பிக்கை என்பது உலக சரித்திரம் நிரூபிக்கும் உண்மை.

அதுவே, பெரியோர்களும் மகான்களும் போதிக்கும் உண்மை.

வாழ்க்கையிலும் நாம் காணும் உண்மை.

ஆகையால் ஸ்ரீ பி. டி. ராஜன் அவர்கள் இறைவனிடம் வைத்த நம்பிக்கையை நாம் வாழ்த்திப் போற்றுகிறோம்.

* * *

சென்ற வாரத்தில் ஸ்ரீ பி. டி. ராஜன் அவர்களுடைய அறுபதாம் ஆண்டு பூர்த்தியை மதுரை மாநகரில் அவருடைய நண்பர்கள் பலர் கொண்டாடினார்கள்.

அச்சமயம் திரு பி. டி. ராஜன் தாம் இனித் தமது வாழ்நாளைப் பொதுப் பணிக்கே அர்ப்பணம் செய்யப் போவதாகக் கூறினார். பதவி, உத்தியோகம் எதையும் எதிர்பார்க்காமல் தொண்டு செய்யப் போவதாகவும் கூறினார். மதுரைத் தமிழ்ச் சங்கத்துக்குப் புத்துயிர் அளிக்க வேண்டும் என்ற ஆசையையும் வெளியிட்டார்.

அரசியலையும் கட்சிகளையும் மறந்துவிட்டு மதிப்பிடுவோமானால், திரு பி. டி. ராஜன் செந்தமிழ் நாட்டின் சிறந்த புதல்வர்களில் ஒருவர் என்பதில் ஐயமில்லை. அவர் தமிழர் பண்பாட்டின் தலைசிறந்த பிரதிநிதி; பெருங்குணம் படைத்த பெருந்தகையாளர்; சத்திய சந்தர்; நட்புக்கு உகந்தவர். அவரது இனிய குணம் அவருடன் பழகிய அனைவருடைய உள்ளங்களையும் கவரும் தன்மையது.

திரு பி. டி. ராஜனின் தமிழன்பு பிரசித்தமானது. மதுரை மாநகரில் நடந்த முதல் தமிழ்த் திருவிழாவை நடத்தி வைத்தவர் அவர்தான் என்பதை நேயர்கள் நினைவு கூருவார்கள்.

* * *

பதவியை விரும்பவில்லை என்று உறுதி கொள்ளுகிறவர்களுக்குப் பதவி தானே தேடிக் கொண்டு வருகிறது. புதிய சென்னைச் சட்டசபையின் ஆரம்ப சபாநாயகராக ஸ்ரீ பி. டி. ராஜன் நியமிக்கப்பட்டிருக்கிறார் என்று அறிந்து மிக்க மகிழ்ச்சியடைகிறோம்.

இரண்டே தினங்கள்தான் அவர் சபாநாயகர் பதவியில் இருப்பார் என்றாலும், அந்தப் பதவிக்கே அவர் கௌரவம் தேடிக் கொடுக்கக் கூடியவராவார்.

திரு பி. டி. ராஜனுடைய சபாநாயகத்தின் கீழ் ஆரம்பமாகும் புதிய சட்ட சபை நீடித்து நிலைத்திருந்து இச் சென்னை மாகாணத்தின் மேன்மைக்குரிய அரும் பெரும் காரியங்களைச் செய்யுமாக.



மே 1 முதல்

சென்னை பிரபாத் வெலிங்டன்

இரு தியேட்டர்களிலும்
மற்றும் தமிழ்நாடெங்கும்

பக்ஷிராஜாவின்

# காஞ்சனா





லலிதா. பத்மினி
K.R.ராமசாமி. மனோஹர்
T.S. துரைராஜ். துரைஸ்வாமி
குமாரி. M.R.சந்தானலக்ஷ்மி
P.S.ஞானம். K.N. கமலம்
நடிக்கும்...

பல லக்ஷக்கணக்கான வாசகர்கள்
ஆனந்த விகடனில்
வாசித்து மகிழ்ந்த கதை...
"லக்ஷ்மி" எழுதியது

# பொன்னியின்

## அத்தியாயம் 21

## “நீயும் ஒரு தாயா?”

சிவபக்தியே உருவெடுத்தாற் போல் விளங்கிய மாதரசி செம்பியன் மாதேவி தொடர்ந்து கூறினார்:—

“மகனே! உன் தந்தை கண்டராதித்த தேவர் சிம்மாசனம் ஏறிய பொழுது சோழ ராஜ்யத்தில் ஒரு சங்கடமான நிலைமை ஏற்பட்டிருந்தது. உன் பாட்டனார் பராந்தகச் சக்கரவர்த்தியின் பெருமையை நீ அறிந்திருக்கிறாய். அவருடைய ஆட்சி காலத்தில் சோழ ராஜ்யம் தெற்கே ஈழநாடு வரையில் வடக்கே கிருஷ்ணா நதி வரையிலும் பரவியது. ஆனால் அவருடைய அந்திய காலத்தில் இராஜ்யத்துக்கும் இராஜ குலத்துக்கும் பல விபத்துக்கள் ஏற்பட்டன. இராவணேசுவரனுடைய மூல பல சைன்யத்தைப் போல் இரட்டை மண்டலத்துப் படைகள் படை எடுத்து வந்தன. பராந்தகச் சக்கரவர்த்தியின் மூத்த புதல்வரும் ஒப்புவமையில்லாத வீராதி வீரரும் உன் பெரிய தகப்பனாருமான இராஜாதித்த தேவர் இரட்டை மண்டலத்து மாபெரும் சைன்யத்தை எதிர்க்கப் புறப்பட்டார். வடக்கே தக்கோலம் என்னுமிடத்தில் குருக்ஷேத்திர யுத்தத்தைப் போன்ற மாபெரும் போர் நடந்தது. லட்சக் கணக்கான வீரர்கள் மாண்டனர். இரத்த வெள்ளம் பெருக்கெடுத்தோடியது. இரட்டை மண்டலத்தாரின் சைன்யம் சிதறி ஓடியது. ஆனால் அந்தப் போரில் இராஜாதித்த தேவர் பலியாகி விட்டார். உன்னுடைய சித்தப்பா அரிஞ்சய தேவரும் அந்தப் போரில் ஈடுபட்டுப் படுகாயம் அடைந்தார். ஆனால் அவரைப் பற்றி யாதொரு விவரமும் அப்போது தெரியவில்லை. அரிஞ்சய தேவரின் மூத்த புதல்வர் சுந்தர சோழர், — சின்னஞ் சிறு பிராயத்துப் பிள்ளை — ஈழத்துப் போருக்குச் சென்றிருந்தார். அவரைப் பற்றியும் செய்தி கிட்டவில்லை. இராஜ குலத்தில் பிறந்து அச்சமயம் தஞ்சை அரண்மனையில் பராந்தகச் சக்கரவர்த்தியின் அருகில் இருந்தவர் உன் தந்தைதான்.




ஆனால் உன் தந்தையோ இளம் பிராயத்திலேயே இராஜ்ய விவகாரங்களை வெறுத்துச் சிவபெருமானிடம் மனத்தைச் செலுத்தி வந்தவர். அவருக்கு யுத்தம் என்றால் பிடிப்பதில்லை. மன்னர்களின் மண்ணாசை காரணமாக மக்கள் போரிட்டு மடிவானேன் என்று அவர் வருந்தினார். தந்தையிடமும் சகோதரர்களிடமும் அதைக் குறித்து வாதித்தார். சிவஞானச் செல்வர்களான பெரியோர்களின் சகவாசத்திலும் புண்ணிய ஸ்தல யாத்திரையிலும் ஆலய வழிபாட்டிலும் காலத்தைச் செலவிட்டார். வாள், வேல் முதலிய ஆயுதங்களைக் கையினால் தொடவும் அவர் விரும்புவதில்லை. யுத்த தந்திரங்களிலும் போர் முறைகளிலும் அவர் பயிற்சி பெறவில்லை. பொய்யும் புனை சுருட்டும் வஞ்சகமும் வேஷமும் சூழ்ச்சிகளும் மறு சூழ்ச்சிகளும் கொலை முதலிய பாதகங்களிலும் நிறைந்தது இராஜரீகம் என்று அவர் நம்பினார். ‘திருடன் பிறர் பொருளைத் திருடுவதற்கும் ஒரு நாட்டு அரசன் இன்னொரு நாட்டைக் கவர்வதற்கும் என்ன வித்தியாசம்?’ என்று அவர் கேட்டார்.

மகனே! விதி வசத்தால் அப்படிப்பட்ட கொள்கையுடைய உன் தந்தை இந்தச் சோழ நாட்டின் பாரத்தை வகிக்கும்படியாக நேர்ந்து விட்டது.

பராந்தகச் சக்கரவர்த்தி இராஜ்யத்துக்கு நேர்ந்த பல விபத்துக்களினாலும் இராஜாதித்தரின் மரணத்தினாலும் மனம் நொந்து மரணத்தை எதிர்பார்த்திருக்கும் வேளையில் உன் தந்தையை அழைத்து, ‘இராஜ்ய பாரத்தை நீதான் ஏற்றுக் கொள்ள வேண்டும்’ என்றார். உன் தந்தை மரணத் தறுவாயிலிருந்த உன் பாட்டனாரின் மனத்தை மேலும் புண்படுத்த விரும்பாமல் ஒப்புக் கொண்டார். உன்



# செல்வன்

தந்தையை எனக்கு முன்னால் மணந்திருந்த பாக்கியவதியான வீரநாராயணி தேவி அதற்கு முன்னரே சிவபதம் அடைந்து விட்டார். நானே அப்போது உன் தந்தையைப் பார்த்ததே யில்லை. ஆகையால், உன் தந்தையின் காலத்துக்குப் பிற்பாடு சோழ மகா ராஜ்ஜியம் என்ன ஆவது என்ற கவலை உன் பாட்டனாருக்கு ஏற்பட்டது.

அதிர்ஷ்டவசமாக அச்சமயத்தில் உன் சிறிய தந்தையின் குமாரரைத் தேடுவதற்காக ஈழத்திற்குப் போனவர்கள், அங்கே ஒரு தீவிலிருந்த சுந்தர சோழரைக் கண்டு பிடித்து அவரை அழைத்துக் கொண்டு வந்தார்கள்.

பராந்தகச் சக்கரவர்த்தி சுந்தர சோழரிடம் அளவிலாத பிரியம் வைத்திருந்தார். பேரப் பிள்ளையைக் கைக்குழந்தையா யிருந்த நாளிலிருந்து மடியில் வைத்துத் தாலாட்டிப் பாராட்டி வளர்த்து வந்தார். பெரியோர்கள் பலர் சுந்தர சோழரின் மூலமாய்ச் சோழகுலம் மகோன்னதம் அடையப் போகிறது என்று சொல்லி யிருந்தார்கள்.

இத்தகைய காரணங்களினால் உன் பாட்டனாருக்குச் சுந்தர சோழர்மீது அபாரமான பிரேமை. ஆகையால் உன் தந்தை சிம்மாசனம் ஏறும்போது சுந்தர சோழருக்கு இளவரசுப் பட்டம் கட்டி விடவேண்டும் என்றும், அவருடைய சந்ததியார்கள்தான் சோழ நாட்டை ஆண்டு வர வேண்டும் என்றும் சொல்லி விட்டுச் சிவபதம் அடைந்தார்.

இந்த விவரங்களை யெல்லாம் உன் தந்தை என்னிடம் கூறினார். பராந்தகச் சக்கரவர்த்தி மரணத் தறுவாயில் வெளியிட்ட விருப்பத்தை நிறைவேற்ற அவர் உறுதி கொண்டிருந்தார். சுந்தர சோழரும் அவருடைய சந்ததியாரும் பட்டத்துக்கு வருவதில் எவ்வித இடையூறும் நேரிடக் கூடாதென்று எண்ணினார். உன் தந்தைக்கு இராஜ்ஜியம் ஆளும் ஆசை இல்லை; இராஜரீக காரியங்களில் பற்றுதலும் இல்லை. அவர் புண்ணிய புருஷர். அவருடைய உள்ளம் சதா சர்வ காலமும் நடராஜப் பெருமானின் இணையடித் தாமரைகளில் சஞ்சரித்துக் கொண்டிருந்தது. ஆகவே தமது தம்பியாகிய அரிஞ்சயரிடமும் அவருடைய புதல்வர் சுந்தர சோழரிடமும் இராஜ்ய காரியங்கள் முழுவதையும் ஒப்படைத்திருந்தார். தாம் சிவபெருமானுடைய கைங்கரியத்தில் ஈடுபட்டிருந்தார். முன்னமே சொன்னேனே, அதுபோல் அவருக்கு மறுபடியும் மணம் செய்து கொள்ளும் எண்ணமே இருக்கவில்லை. ஆனால் அவருடைய மன உறுதியைக் கலைக்க நான் ஒருத்தி வந்து சேர்ந்தேன். நானும் சிவ பக்தியில் ஈடுபட்ட 'பிச்சி' என்று அறிந்ததினாலேயே அவர் என்மீது பிரியங் கொண்டு என்னைத் திருமணம் புரிந்தார். அவரைப் பதியாக அடைந்த நான் பாக்கியசாலி. எத்தனையோ ஜன்மங்களில் அவரை அடைய நான் தவம் செய்திருக்க வேண்டும். அவரைத் தந்தையாகப் பெற்ற நீயும் பாக்கியசாலி. இந்த உலகில் இறைவனைக் கண்ணாரக் கண்டு மகிழ்ந்த மகான்கள் வெகு சிலர்தான். சிவபெருமான் ரிஷபாரூடராய் வந்து உன் தந்தைக்குக் காட்சி தந்து அவரை இம்மண்ணுலகிலிருந்து அழைத்துப் போனார். நான் இப்போது உன்னை என் ஊனக் கண்களால் பார்ப்பது போல உன் தந்தை பரமசிவனைத் தரிசித்தார். அப்படிப் பட்ட புண்ணிய புருஷருடைய விருப்பத்தைநிறைவேற்ற நானும் நீயும் கடமைப் பட்டவர்கள்!...''



அன்னை இவ்விதம் கூறி நிறுத்தியபோது, கேட்

டுக் கொண்டிருந்த மகனுடைய உடல் பதறிக் கொண்டிருந்தது : அவனுடைய உள்ளம் கொதித்துக் கொண்டிருந்தது.

"அது எப்படி, தாயே! என் தந்தை என்னிடம் ஒன்றும் தெரிவிக்கவில்லையே? நான் என்ன கடமைப் பட்டிருக்கிறேன்? எந்த விதத்தில் கடமைப் பட்டிருக்கிறேன்?" என்றான் மதுராந்தகன்.

"மகனே! கேள்! உன் தந்தை சிவபெருமானுடைய பாத மலர்களை அடைந்தபோது நீ சின்னஞ்சிறு பிள்ளை. ஆகையால், உன்னிடம் அவர் ஒன்றும் தெரியப்படுத்த முடியவில்லை. ஆனால் என்னிடம் சொல்லிவிட்டுப் போனார். நாங்கள் மணம் புரிந்த புதிதில் மக்கள் பேற்றை விரும்புவதில்லையென்று முடிவு செய்திருந்தோம். ஆனால் பேதையாகிய என்னால் அந்த மன உறுதியை நிறைவேற்ற முடியவில்லை. கன்னிப் பருவத்தில் சிவபெருமானிடம் நான் கொண்டிருந்த பக்தி உன் தந்தையிடம் கொண்ட பிரேமையாக மாறியது. நாளடைவில், என் கையில் ஏந்தி மார்போடு அணைத்து மடியில் வைத்துத் தாலாட்டிப் பாராட்டிக் கொஞ்சுவதற்குக் குழந்தை வேண்டும் என்று என் இருதயம் தாபம் கொண்டது. மற்றப் பெண்களின் கையிலும் மடியிலும் குழந்தையைக் கண்டால் என் உடம்பெல்லாம் துடித்தது; உள்ளம் பற்றி எரிந்தது. குழந்தைப் பருவத்தில் என்னை ஆட்கொண்ட இறைவனிடம் வரம் கோரினேன். இறைவனும் இந்தப் பேதையின் கோரிக்கையை நிறைவேற்றினார். உன்னை எனக்கு அளித்தார். ஒரு பக்கத்தில் உன்னைப் பெற்றதினால் நான் உள்ளமும் உடலும் பூரித்தேன்; மற்றொரு பக்கத்தில் உன் தந்தையின் கோபத்துக்கு ஆளாகி விட்டேனே என்று பயந்தேன். அந்த மகா புருஷர் என்மீது கோபிக்கவில்லை. ஆனால் அவருடைய வாக்கை நிறைவேற்ற வேண்டிய பொறுப்பை மட்டும் என்மீது சுமத்தி விட்டுப் போனார்.

மகனே! உன்னை இந்த மண்ணுலக வாழ்க்கையில் பற்றுதல் கொள்ளாமல் சிவ பக்த சிகாமணியாகும்படி வளர்ப்பேன் என்று உன் தந்தைக்கு வாக்குக் கொடுத்தேன். அதை நிறைவேற்றி விட்ட



தாகவே சில காலத்துக்கு முன்பு வரையில் எண்ணி இறுமாந்திருந்தேன்.

ஆனால், என் உயிர்க்குயிரான மகனே! என் கண்ணுக்குக் கண்ணான செல்வப் புதல்வனே! சில நாளாக நான் ஏதேதோ கேள்விப் படுகிறேன். அப்படிப்பட்ட பேச்சைக் கேட்கும்போதெல்லாம் என் நெஞ்சு புண்ணாகிறது. நான் கேள்விப் படுவதெல்லாம் பொய்யென்று நீ உறுதி சொல்லி என் நெஞ்சில் உள்ள புண்ணை




ஆற்ற மாட்டாயா?'' என்று அன்னை செம்பியன்மாதேவி கெஞ்சினாள்.

''தாயே! தங்களுடைய மர்மமான வார்த்தைகள் என்னுடைய நெஞ்சையும் புண்ணாக்குகின்றன. தாங்கள் என்ன கேள்விப்படுகிறீர்கள்? என்னிடம் என்ன எதிர்பார்க்கிறீர்கள்? என்னிடம் என்ன உறுதி கேட்கிறீர்கள்!'' என்று மதுராந்தகன் சீறினான்.

''குழந்தாய்! என் மனதிலுள்ளதை அறிந்து கொள்ளும் சக்தியை நீ இழந்து விட்டாய் போலும். வெளியிட்டுச் சொல்லத்தான் வேண்டும் என்கிறாய். நல்லது, சொல்லுகிறேன். உன் மனது சிவபக்தியாகிற கங்கை நதியிலிருந்து மண்ணாசையாகிய குட்டையில் விழுந்து விட்டது என்று கேள்விப்படுகிறேன். சோழ குலத்துச் சிம்மாசனத்தில் ஏற நீ ஆசை கொண்டிருக்கிறாய் என்று கேள்விப்படுகிறேன். உன் புனிதமான உள்ளத்தை நம் விரோதிகள் அவ்விதம் கெடுத்து விட்டார்கள் என்று அறிகிறேன். நான் இவ்வாறு கேள்விப்பட்டது உண்மையல்ல என்று நீ கூறினால், என் மனம் நிம்மதி அடையும்!'' என்றாள் மூதாட்டி.

மதுராந்தகன் இதுவரை உட்கார்ந்திருந்த பீடத்திலிருந்து எழுந்து நின்றான். அவனுடைய படபடப்பைப் பார்த்துத் தாயும் எழுந்தாள்.

''என்னுடைய மனத்தை விரோதிகள் யாரும் கெடுக்கவில்லை. என்னைச் சிம்மாசனம் ஏற்ற விரும்புகிறவர்கள் என் விரோதிகளா? எனக்காகத் தங்கள் உயிரையும் கொடுக்க முன் வந்திருப்பவர்கள் என் விரோதிகளா? ஒரு நாளும் இல்லை. உண்மையில் என் ஜன்ம விரோதி யார்? என்னைப் பெற்றவளாகிய நீதான்!...'' என்று மதுராந்தகன் கூவினான்.

ஆத்திர மிகுதியால் அச்சமயம் அவன் மரியாதையை மறந்தான்; சின்னப் பழுவேட்டரையர் நல்வார்த்தைகளினால் அன்னையின் மனத்தை மாற்றும்படி சொல்லியிருந்ததை மறந்து வசைமாரி பொழிந்தான்.

"ஆம்; நீதான் என் ஜன்ம சத்துரு. வேறு யாரும் இல்லை. நீயும் ஒரு தாயா? நீயும் ஒரு ஸ்திரீயா? உலகத்தில் தாய்மார்கள் தங்கள் பிள்ளைகளின் உரிமைக்காகப் படாத பாடுபடுவார்கள். கதைகளிலும் காவியங்களிலும் கேட்டிருக்கிறேன். வாழ்க்கையிலும் பார்த்திருக்கிறேன். அன்னையின் இயல்புக்கே மாறான இயல்புடைய நீ மானிட ஸ்திரீதானா? அல்லது மனிதப் பெண் உருக்கொண்ட அரக்கியா? நான் உனக்கு என்ன துரோகம் செய்தேன்? நீ எதற்காக இந்தப் பெரும் துரோகத்தை எனக்குச் செய்கிறாய்? எல்லாவித நியாயங்களினாலும் எனக்குச் சேர வேண்டிய இராஜ்யத்தைப் பிடுங்கி இன்னொருவனுக்குக் கொடுப்பதில் உனக்கு என்ன சிரத்தை! என் தந்தையின் விருப்பம் என்று சொல்லுகிறாய். அவருக்கு நீ வாக்குக் கொடுத்ததாகச் சொல்லுகிறாய். அதற்கெல்லாம் அத்தாட்சி என்ன? நான் நம்பவில்லை. எனக்கு யாரோ துர்ப்போதனை செய்து விட்டதாகச் சொல்லுகிறாய். இல்லவே இல்லை. உனக்குத்தான் யாரோ துர்ப் போதனை செய்து உன் மனதைத்தான் கெடுத்துவிட்டிருக்கிறார்கள். தாயை மகனுக்கு விரோதியாக்கியிருக்கிறார்கள். நியாயமாக எனக்கு உரிய சோழ சிங்காதனத்தை நான் ஒருநாளும் கைவிட மாட்டேன். நீ சொன்னாலும் விடமாட்டேன். சிவபதம் அடைந்த என் தந்தையே திரும்பி வந்து சொன்னாலும் கேட்க மாட்டேன். இந்தச் சோழ சாம்ராஜ்யம் என்னுடையது; இந்தப் பழமையான சிங்காதனம் எனக்குரியது; கரிகால் பெருவளத்தான் அணிந்திருந்த மணி மகுடம் எனக்கு உரியது. அவற்றை நான் அடைந்தே தீருவேன். இதோ என் கழுத்தில் போட்டிருக்கும் உருத்திராட்ச மாலை நீ எனக்கு அளித்தது; தாய் என்ற மரியாதைக்காக இத்தனை நாளும் அதைத் தரித்திருந்தேன்; என்னைப் பேடியாக்கி நாடுநகரமெல்லாம் நகைக்கும்படி செய்த இந்த ருத்திராட்ச மாலையை இதோ இந்தக் கணமே கழற்றி எறிகிறேன்; நீயே அதை வைத்துக் கொள்ளலாம்!"

இவ்விதம் பித்தம் பிடித்தவனைப் போல் பிதற்றி விட்டு மதுராந்தகன் தன் கழுத்திலிருந்த ருத்திராட்ச மாலையை அவசரமாகக் கழற்ற முயன்றான்; கழற்ற முடியாமல் அதை அறுக்க முயன்றான்; ஆனால் கழுத்து நெறித்ததே தவிர மாலை அப்படியே யிருந்தது.

மதுராந்தகன் அழகிய தோற்றமுடையவன். சுந்தர சோழரின் புதல்வர்களைக் காட்டிலும் அழகன் என்று சொல்லலாம். அவர்களிடம் இல்லாத பெண் தன்மையின் வசீகரமான சாயல் அவன் முகத்தில் பொலிந்தது. அத்தகைய களை பொருந்திய அவன் முகம் கோபத்தினாலும் ஆத்திரத்தினாலும் இப்போது விகார மடைந்து காட்டியது. அதைக் காணச் சகியாமல் செம்பியன் மாதேவி கண்களை மூடிக் கொண்டாள்.

அவன் சத்தமிட்டு ஓய்ந்த பிறகு தன் கண்களைத் திறந்து பார்த்தாள். குரலின் சாந்தத்தில் சிறிதும் மாறுதல் இல்லாமல், "மகனே! சற்று அமைதியாயிரு. நான் வஞ்சக அரக்கியாகவே இருந்தாலும், என் வார்த்தைகளைச் சற்று செவி சாய்த்துக்கேள்!" என்றாள்.

மதுராந்தகன் அந்தக் குரலைக் கேட்டுச் சிறிது அடங்கினான். "நன்றாய்க் கேட்கிறேன். கேட்க மாட்டேன் என்று மறுக்கவில்லையே!" என்றான்.

"தாயின் இயல்பைக் குறித்து நீ குறிப்பிட்டாய். பொல்லாத அரக்கியாயிருந்தாலும் தன் குழந்தைக்குத் துரோகம் செய்ய மாட்டாள். துஷ்ட மிருகங்களும் தங்கள் குட்டிகளை மற்றத் துஷ்ட மிருகங்களிடமிருந்து காப்பாற்ற முயல்கின்றன. அதுபோலவே தான் நானும் உன்னைக் காப்பாற்ற முயல்கிறேன். நீ இராஜ்யத்துக்கு ஆசைப்பட வேண்டாம் என்று நான் சொல்லுவதற்கு முன்னே கூறியதைத் தவிர வேறு காரணமும் இருக்கிறது. இராஜ்ய ஆசையினால் உன் உயிருக்கே ஆபத்து வரும். பெற்று வளர்த்த தாய் தன் மகன் உயிரோடிருக்க வேண்டும் என்று ஆசைப்படுவதில் குற்றம் உண்டா? நீ இராஜ்யத்துக்கு ஆசைப்பட்டால், சுந்தர சோழரின் புதல்வர்களுக்கு எதிரியாவாய். ஆதித்த கரிகாலனும் அருள்மொழி வர்மனும் வீராதி வீரர்கள். நீயோ ஆயுதம் எடுத்து அறியாதவன். சோழ நாட்டுச் சைன்யம் முழுவதும் சுந்தர சோழருடைய புதல்வர்களின் கட்சியிலேயே இருக்கும். படைத் தலைவர்களும் அவர்களுக்குச் சார்பாக இருப்பார்கள். அக்கம் பக்கத்து நாடுகளிலும் அவர்களுக்கு நண்பர்கள் இருக்கிறார்கள். உனக்குத் துணைவர்கள் யார்? யாரை நம்பி நீ அவர்களுடன் போர் தொடங்குவாய்? மகனே! சில நாளாக வானத்தில் தூமகேது தோன்றி யிருப்பதை நீ அறிவாய். வால் நட்சத்திரம் வானில் தோன்



றினால் அரச குலத்தினர் உயிருக்கு அபாயம் என்பது உலகம் கண்ட உண்மை. அப்படி நேரும் விபத்து உனக்கு நேராமலிருக்க வேண்டுமே என்றுதான் நான் கவலைப்படுகிறேன். குழந்தாய்! என் ஏக புதல்வன் உயிரோடிருக்க வேண்டும் என்று நான் ஆசைப்படுவது தவறா? அது உனக்கு நான் இழைக்கும் துரோகமா?''

இவ் வார்த்தைகளினால் மதுராந்தகனுடைய ஆத்திரம் சிறிது தணிந்தது. அவன் உள்ளம் கனிவடைந்தது.

''அன்னையே! மன்னியுங்கள்! தங்களுடைய கவலை இதுதான் என்று முன்னமே சொல்லியிருக்கலாமே? ஒரு நொடியில் தங்கள் கவலையைத் தீர்த்திருப்பேனே! நான் அப்படியொன்றும் துணைவர்கள் இல்லாத அநாதையல்ல. சோழ சாம்ராஜ்யத்தில் மிகச் செல்வாக்கு வாய்ந்த சிற்றரசர்களும் பெருந்தரத்து அதிகாரிகளும் என் பக்கம் இருக்கிறார்கள். பழுவேட்டரையர்கள் என் கட்சியில் இருக்கிறார்கள். கடம்பூர் சம்புவரையர் என் பக்கம் இருக்கிறார். தங்கள் சகோதரரும் என் மாமனுமான மழவரையரும் என் கட்சியில் இருக்கிறார். மற்றும் நீலதங்கரையரும், இரட்டைக் குடை இராஜாளியாரும், குன்றத்தூர்ப் பெருங்கிழாரும் தங்களுடைய பூரண பலத்துடன் என்னை ஆதரிக்கிறார்கள். என்னை ஆதரித்து நிற்பதாகச் சத்தியம் செய்து கொடுத்திருக்கிறார்கள்......''

''மகனே! இவர்கள் செய்து கொடுக்கும் சத்தியத்தில் எனக்கு நம்பிக்கையில்லை. சுந்தர சோழச் சக்கரவர்த்திக்கும் அவருடைய சந்ததிகளுக்கும் உண்மையுடன் நடப்பதாக இவர்கள் ஒரு காலத்தில் சத்தியம் செய்து கொடுத்தார்கள். அவர்கள் உனக்கு உண்மையாக நடப்பார்கள் என்று வைத்துக் கொள்ளலாம். இவர்களிடம் உள்ள சைன்யம் வெகு சொற்பம் என்பது உனக்குத் தெரியாதா? வடக்கே யுள்ள சைன்யம் ஆதித்த கரிகாலனுடைய தலைமையில் இருக்கிறது. தென் திசைச் சேனையோ கொடும்பாளூர் வேளாரின் தலைமையில் இருக்கிறது......''

''தாயே! என் கட்சியை ஆதரிக்கும் சிற்றரசர்கள் எந்த நேரத்திலும் தலைக்குப் பதினாயிரம் வீரர்களைச் சேர்த்துக்கொண்டு வரக் கூடியவர்கள்.''

''சைன்யம் ஒரு பக்கம் இருக்கட்டும். மக்களைப் பற்றி என்ன? சோழ நாட்டு மக்கள் சுந்தர சோழரின் புதல்வர்களிடம் எவ்வளவு அபிமானம் கொண்டவர்கள் என்பது உனக்குத் தெரியாதா? இன்றைக்கு நீயே பார்த்தாய். இந்தப் பழையாறை நகருக்கு இன்று அருள்மொழி வர்மனோ ஆதித்த கரிகாலனோ வந்திருந்தால் மக்கள் எப்படித் திரண்டு கூடி வரவேற்றிருப்பார்கள்? இந்த ஊர் மக்கள் ஒரு காலத்தில் உன்னிடமும் அன்புடனேதான் இருந்தார்கள். பழுவேட்டரையர்களுடன் நீ உறவு பூண்டதிலிருந்து உன்னை மக்கள் வெறுக்கவே தொடங்கி விட்டார்கள்...''

''தாயே! மக்களின் அபிமானத்தைப் பற்றி நான் சிறிதும் கவலைப்படவில்லை. மக்களின் அபிமானம் என்னத்துக்கு ஆகும்? மக்கள் ஆளப்பட வேண்டியவர்கள். சிம்மாசனத்தில் யார் வீற்றிருந்து அரசு செலுத்துகிறார்களோ, அவர்களிடம் மக்கள் பக்தி செலுத்த வேண்டியவர்கள்!......''

''மகனே! உனக்குப் போதனை செய்திருப்பவர்கள் அரசியல் நீதியின் ஆரம்ப தத்துவத்தைக் கூட உனக்கு உணர்த்தவில்லை. மக்களின் அபிமானம் இல்லாமல் எந்த அரசனும் நீடித்து அரசு செலுத்த முடியாது. அப்படி அரசு புரிவதில் புண்ணியமும் இல்லை!......''

இவ்வாறு அந்தப் பெருமாட்டி சொல்லிக் கொண்டிருந்தபோது அரண்மனை வாசலில் ஒரு பெரும் ஆரவாரம் கேட்டது. ஓலக் குரலும் சாபக் குரலும் கோபக் குரலும் கேள்விக் குரலும் ஆயிரக்கணக்கான மனித கண்டங்களிலிருந்து எழுந்து பெருங் காற்று அடிக்கும்போது சமுத்திரத்தில் உண்டாகும் பயங்கரப் பேரொலியாகக் கேட்டது.

''மகனே! சோழ சாம்ராஜ்யத்துக்கு ஏதோ பெரும் விபத்து நெருங்கிக் கொண்டிருக்கிறது. அதன் முதல் அறிகுறிதான் இது. நான் அரண்மனைக்கு வெளியே சென்று என்ன விஷயம் என்று தெரிந்து வருகிறேன். அதுவரையில் நீ இங்கேயே இரு!'' என்றாள் அன்னை.

# அத்தியாயம் 22

# "அது என்ன சத்தம்?"

ஓடையருகில் வந்ததும் படகில் வீற்றிருந்தது அரசிளங் குமரி குந்தவைதான் என்பதை வந்தியத்தேவன் நன்கு தெரிந்து கொண்டான். ஆழ்வார்க்கடியான் அவ்விடத்தில் நிற்கவே, வந்தியத்தேவனும் தயங்கி நின்றான்.

"அப்பனே! ஏன் நிற்கிறாய்! இளைய பிராட்டி வெகு நேரமாய் உனக்காகக் காத்திருக்கிறார். படகில் ஏறியதும் 'இளவரசர் வந்து விட்டார்; பத்திரமாய் இருக்கிறார்' என்ற நல்ல சமாசாரத்தை முதலில் சொல்! உன்னுடைய வீரப் பிரதாபங்களை அளந்து கொண்டு வீண் பொழுது போக்காதே! நான் திரும்பிப் போகிறேன். பழையாறையில் இன்றைக்கு நாம் கலவரப் பிசாசை அவிழ்த்து விட்டு விட்டோம். அதை மறுபடியும் பிடித்துக் கூண்டில் அடைக்க முடியுமா என்று பார்க்கிறேன். உன்னுடைய தடபுடல் சாகசங்களினால் எத்தனை தொந்தரவுகள் நேரிடுகின்றன?" என்று ஆழ்வார்க்கடியான் சொல்லி விட்டு, வந்த வழியாக விரைந்து திரும்பிச் சென்றான்.

வந்தியத்தேவன் மனதில் ஒரு பெரு வியப்பு ஏற்பட்டது. இவன் எப்படி எல்லா விஷயங்களையும் தெரிந்து கொண்டிருக்கிறான்! இத்தனைக்கும் நம்மை ஒரு விவரமும் கேட்கவில்லை. வெறும் ஊகமா? அல்லது எல்லாம் அறிவானா? ஆண்டிகளில் பரம்பரை ஆண்டி என்றும் பஞ்சத்துக்கு ஆண்டி என்றும் இரண்டு வகை உண்டு. ஒற்றர்களிலும் அப்படி இரு வகை உண்டு போலும். நான் அவசரத்துக்கு ஒற்றன் ஆனேன். ஆகையால் அடிக்கடி சங்கடத்தை வருவித்துக் கொள்கிறேன். இந்த வைஷ்ணவன் பரம்பரை ஒற்றன் போலும். அதனால் ஒரு விதப் பரபரப்புமில்லாமல் சாவதானமாகத் தன் வேலையைச் செய்து வருகிறான். ஆனால் யாருக்காக இவன் வேலை செய்கிறான்? இவன் தன்னைப் பற்றிக் கூறியதெல்லாம் உண்மைதானா?

இவ்விதம் யோசித்துக் கொண்டே ஓடை நீர்க் கரைக்கு வந்த வந்தியத்தேவன், ஓடத்திலிருந்த இளவரசியின் முகத்தைப் பார்த்தான். ஆழ்வார்க்கடியானை மறந்தான். தான் போய் வந்த காரியத்தையும் மறந்தான். உலகத்தை மறந்தான். தன்னையுமே மறந்தான். ஆகா! இந்தப் பெண்ணின் முகம் தன்னை விட்டுச் சிறிது நேரம் கூடப் பிரிந்திருக்கவில்லை. கனவிலும் நனவிலும் புயலிலும் மழையிலும் காட்டிலும் கடல் நடுவிலும் தன்னுடன் தொடர்ந்து வந்தது. ஆயினும் என்ன விந்தை! நேரில் பார்க்கும்போது இந்தப் பொன் முகத்தின் அழகு எதனால் அதிகப் பட்டுக் காண்கிறது? ஏன் என் உள்ளத்தில் இத்தகைய கிளர்ச்சி உண்டாகிறது? ஏன் தொண்டையை வந்து அடைக்கிறது? நெஞ்சில் ஏன் இந்தப் படபடப்பு?

சுய நினைவு இல்லாமலே வந்தியத்தேவன் தண்ணீரில் சில அடிகள் இறங்கிச் சென்று ஓடத்தில் ஏறிக் கொண்டான். இளவரசி ஓடக்காரனைப் பார்த்துச் சமிக்ஞை செய்தாள். ஓடம் நகரத் தொடங்கியது. வந்தியத்தேவனுடைய உள்ளமும் ஊசலாடத் தொடங்கியது.

"நிமித்தக்காரா! இளவரசர்களுக்கு மட்டுந்தான் நீ நிமித்தம் சொல்வாயா? எனக்கும் சொல்வாயா? நிமித்தம் எப்படிச் சொல்வாய்? வானத்துக் கிரஹங்களையும் நட்சத்திரங்களையும் பார்த்துச் சொல்வாயா? அல்லது காக்கை குருவிகளைப் பார்த்துச் சொல்வாயா? கை ரேகை பார்த்துச் சொல்வாயா?...முகக்குறி பார்த்துத்தான் சொல்வாய் போலிருக்கிறது. இல்லாவிட்டால், ஏன் என் முகத்தையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருக்கிறாய்? இப்படிச் செய்தாயானால் உயர்குலத்துப் பெண்கள் யாரும் உன்னிடம் நிமித்தம் கேட்க முன்வர மாட்டார்கள்!" என்று அரசிளங் குமரி கூறியது வந்தியத்தேவன் செவிகளில் இனிய கிண்கிணி நாதமாகக் கேட்டது.

"அம்மணி! நிமித்தம் பார்ப்பதற்காகத் தங்கள் முகத்தைப் பார்க்கவில்லை. எங்கேயோ, எப்போதோ பார்த்த முகம் போலிருக்கிறதே என்று ஞாபகப் படுத்திக் கொள்ள முயன்றேன்......"

"தெரியும், தெரியும்! நீர் மிக்க மறதிக்காரர் என்று எனக்குத் தெரியும். நான் ஞாபகப் படுத்துகிறேன். ஏறக்குறைய நாற்பது நாளைக்கு முன்னால் குடந்தை ஜோதிடர் வீட்டில் முதன் முதலாகப் பார்த்தீர். பிறகு அன்றைக்கே அரசலாற்றங் கரையில் பார்த்தீர்..."

"அம்மணி! நிறுத்துங்கள்! தங்கள் வார்த்தையை நான் நம்ப முடியவில்லை. நாற்பது நாளைக்கு முன்புதானா தங்களை

# தந்தையின் புத்திமதி!



"மகனே! நான் வந்துள்ள இந்தப் புண்ணிய உலகில் இலங்கையர்—இந்தியர் என்ற வேற்றுமையே இல்லை! நான் செய்த தவறை நீயும் செய்யாதே!"

முதன் முதலாகப் பார்த்தேன்! நாற்பதினாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் பார்க்க வில்லையா? நூறு நூறு நூறு ஜன்மங்களில் நூறாயிரம் தடவை தங்களைப் பார்க்கவில்லையா? மலை அடிவாரத்தில் பார்க்க வில்லையா? குன்றின் உச்சியிலே பார்க்க வில்லையா? நீர்ச்சுனையின் ஓரத்தில் பார்க்கவில்லையா? அடர்ந்த காட்டின் மத்தியில் கொடும் புலியினால் துரத்தப் பட்டு ஓடி வந்த தங்களை நான் காப்பாற்ற வில்லையா? வேல் எறிந்து அந்தப் புலியைக் கொல்லவில்லையா? அப்போது நான் காட்டில் வேட்டையாடித்திரிந்த வேடுவனாயிருந்தேன். வித விதமான வர்ணச் சிறகுகள் உள்ள அழகழகான கிளிகளை வலை போட்டுப் பிடித்துக் கொண்டு வந்து கொடுத்தேன். தாங்கள் அந்தக் கிளிகளை என்னிடமிருந்து வாங்கிக் கொண்டு வானத்தில் பறக்க விட்டு விட்டுக் கல கலவென்று சிரித்தீர்கள். ஒரு சமயம் நான் மீன் பிடிக்கும் வலைஞனாயிருந்தேன். தூர தூரங்களிலுள்ள ஏரிகளுக்கும் ஆறுகளுக்கும் சென்று வெள்ளி மீன்கள், தங்க மீன்கள், மரகத மீன்களைப் பிடித்துக் கொண்டு வந்து கொடுத்தேன். அவற்றைத் தாங்கள் வாங்கிக் கொண்டு மறுபடியும் ஓடும் தண்ணீரில் விட்டு அவை துள்ளி நீந்திச் செல்லுவதைப் பார்த்து மகிழ்ந்தீர்கள். தொலை தூரங்களிலுள்ள கடல்களுக்குச் சென்று கடலின் ஆழத்தில் மூச்சுப் பிடித்து முழுகி முத்துக்களையும் பவளங்களையும் சேகரித்துக் கொண்டு வந்து கொடுத்தேன். தாங்கள் அவற்றைக் கையினால் அளைந்து பார்த்து விட்டு ஊரிலுள்ள சிறுவர் சிறுமிகளை அழைத்து அவர்களுடைய சின்னஞ் சிறு கைகளிலே முத்துக்களையும் பவளங்களையும் சொரிந்து அனுப்பினீர்கள். முந்நூறு வருஷங்கள் வளர்ந்த இலந்தை மரத்திலிருந்து முப்பது ஆண்டுகளுக்கு ஒரு முறை விளையும் இலந்தைக் கனியைக் காத்திருந்து பறித்து வந்து தங்களிடம் சமர்ப்பித்தேன். அதைத் தாங்கள் வளர்த்த நாகணவாய்ப் பறவைக்குக் கொடுத்து அது கனியைக் கொத்திக் கொத்தித் தின்னுவதைப் பார்த்துக் களித்தீர்கள். தேவலோகத்துக்குப் போய் அங்குள்ள மந்தார மலர்களையும் பாரிஜாத புஷ்பங்களையும் பறித்துக் கொண்டு வந்து தங்கள் முன் பொழிந்தேன். 'எங்கள் கொல்லை வேலியில் பூக்கும் முல்லை மலரின் அழகுக்கும் மணத்துக்கும் இவை ஈடாகுமா?' என்று சொல்லி விட்டீர்கள். தேவேந்திரனிடமிருந்து அவன் அணியும் ஒப்பில்லா

இரத்தின ஹாரத்தை வாங்கிக் கொண்டு வந்து கொடுத்தேன். 'ஒழுக்கமற்ற இந்திரன் அணிந்த மாலையை நான் கையினாலும் தொடுவேனா?' என்று சொல்லி விட்டீர்கள். கைலாசத்துக்குச் சென்று பார்வதி தேவியின் முன்னால் தவங் கிடந்து தேவியின் பாதத்தில் அணியும் சிலம்பை வாங்கிக் கொண்டு வந்தேன். தங்கள் பாதங்களில் சூட்டிவிடுவதாகச் சொன்னேன். 'ஐயையோ! ஜகன் மாதாவின் பொற்பாதச் சிலம்பு என் காலிலே படலாமா? என்ன அபசாரம்? திரும்பக் கொண்டுபோய்க் கொடுத்துவிட்டு வா!' என்றீர்கள். போர்க் களத்துக்குச் சென்று அறுபத்து நாலு தேசங்களின் அரசர்களையும் வென்று அவர்களுடைய மணிமகுடங்களை யெல்லாம் சேகரித்துக் கொண்டு வந்து தங்கள் முன் காணிக்கை செலுத்தினேன். தாங்கள் அந்த மணி மகுடங்களைக் கால்களால் உதைத்துத் தள்ளினீர்கள். 'ஐயோ? தங்கள் மெல்லிய மலர்ப் பாதங்கள் நோகுமே?' என்று கவலைப்பட்டேன். இளவரசி! இவை யெல்லாம் உண்மையா? இல்லையா? அல்லது நாற்பது நாளைக்கு முன்பு முதன் முதலாகத் தங்களை நான் பார்த்ததுதான் உண்மையா?'' என்றான் வந்தியத்தேவன். அப்படியும் அவன் பேசி முடித்துவிட்டதாகக் காணப்படவில்லை.

''தேவி! இன்னொரு ஞாபகமும் வருகிறது. ஒரு சமயம் வெள்ளி ஓடத்தில் நாம் ஏறி, தங்கப் பிடி போட்ட தங்கத் துடுப்புகளைப் பிடித்துக் கொண்டு, வானக் கடலில் வெண்ணிலா அலைகளைத் தள்ளிக் கொண்டு, பிரயாணம் செய்தோம்:.....'' என்று ஆரம்பித்தான்.

''ஐயையோ! இந்த நிமித்தக்காரனுக்கு நன்றாய்ப் பைத்தியம் பிடித்து விட்டது போலிருக்கிறது. படகைத் திருப்பிக் கரைக்குக் கொண்டு போக வேண்டியதுதான்!'' என்றாள் இளவரசி.

''இல்லை, தேவி, இல்லை! சற்று முன்னால் இந்த ஓடைக்கரைக்கு வந்து சேரும் வரையில் என் அறிவு தெளிவாகத்தானிருந்தது. இல்லாவிட்டால் இந்தப் பழையாறை நகருக்குள் பிரவேசிப்பதற்கு நான் உபாயம் கண்டு பிடித்திருக்க முடியுமா? மதுராந்தகத் தேவரிடம் நிமித்தக்காரன் என்று சொல்லி, அதை நம்பும்படியும் செய்து, அரண்மனைக்கு வந்திருக்க முடியுமா? வைத்தியர் மகனிடமிருந்துதான் அவ்வளவு எளிதில் தப்பி வந்திருக்க முடியுமா? இந்தப் படகில் ஏறித் தங்கள் திருமுகத்தைப் பார்த்தவுடனேதான், மது உண்டவனைப் போல் மதிமயங்கிப் போய்விட்டேன்!'' என்று சொன்னான் வந்தியத் தேவன்.

''ஐயா! அப்படியானால், என் முகத்தைத் தாங்கள் பார்க்க வேண்டாம். இந்த ஓடையின் தெளிந்த நீரைப் பாரும். நீல வானத்தைப் பாரும். ஓடைக் கரையில் வானளாவி வளர்ந்திருக்கும் மரங்களைப் பாரும். அரண்மனை மாடங்களைப் பாரும். பளிங்குக் கல் படித்துறைகளைப் பாரும். இந்த ஓடையில் பூத்திருக்கும் ஆம்பல் மலர்களையும் செங்கழுநீர்ப் பூக்களையும் பாரும். அல்லது இந்தச் செவிட்டு ஓடக்காரனின் முகத்தையாவது சற்றே பாரும். அவ்விதம் பார்த்துக் கொண்டே தாங்கள் போன காரியம் என்ன ஆயிற்று, காயா பழமா, என்று சொல்லும். இளவரசரை அழைத்து வந்தீரா, சௌக்கியமா இருக்கிறாரா, எங்கே விட்டு வந்தீர், யாரிடம் விட்டு வந்தீர் என்று முதலில் தெரியப்படுத்தும். பிறகு, இங்கிருந்து புறப்பட்டது முதல் நடந்தவை எல்லாவற்றையும் சொல்லும்!'' என்று இளவரசி கூறினாள்.

அதற்கு வந்தியத் தேவன், ''தேவி! தங்களிடம் ஒப்புக்கொண்டு போன காரியத்தை வெற்றிகரமாக முடித்திராவிட்டால், தங்களிடம் திரும்பி வந்து என் முகத்தைக் காட்டியிருப்பேனா? இளவரசரை இலங்கையிலிருந்து அழைத்துக் கொண்டு வந்தேன். அதற்கேற்பட்ட ஆயிரம் இடையூறுகளையும் வெற்றி கொண்டு அழைத்து வந்தேன். இளவரசர் சுகமாயிருக்கிறார் என்று நான் சொல்ல முடியாது. நான் அவரை விட்டுப் பிரியும்போது அவருக்குக் கடுமையான சுரம். ஆனால் பத்திரமான கைகளில் அவரை ஒப்படைத்து வந்திருக்கிறேன். ஓடக்காரப் பெண் பூங்குழலியிடமும், பூக்காரச் சிறுவன் சேந்தன் அமுதனிடமும் இளவரசரை விட்டு வந்திருக்கிறேன். அவர்கள் இளவரசரைக் காப்பாற்றுவதற்காக நூறாயிரம் தடவை வேண்டுமென்றாலும் தங்கள் உயிரைக் கொடுக்கக் கூடியவர்கள்!'' என்றான்.

அச்சமயம் தூரத்தில் பயங்கரமான, குழப்பமான, அநேகாயிரம் குரல்களின் ஒருமித்த ஓலம் போன்ற சத்தம் எழுந்தது. சத்தம் வந்த திசையை அரசிளங்குமரியும் வந்தியத்தேவனும் பயத்தோடும் கவலையோடும் நோக்கினார்கள்.

''அது என்ன ஆரவாரம்? கோபங் கொண்ட ஜனத் திரளின் கூக்குரல் போல் அல்லவா இருக்கிறது?''

''ஆம்; அப்படித்தான் தோன்றுகிறது!'' என்றான் வந்தியத்தேவன். *

---

★ இந்தக் காட்சியை நமது இந்த இதழின் அட்டைப்படம் சித்திரிக்கிறது.

# சோப்புகளுக்கு ராஜா




கால் நூற்றாண்டுகளுக்கு மேலாக கோத்ரெஜ் நெ. 1
சோப் அரசனாயிருந்து வருகிறது. தலைமுறை தலைமுறை
யாக உபயோகிக்கும் பலவித ஜனங்களே
அதற்கு இப்பெருமையுள்ள பட்டத்தை அளித்
திருக்கின்றனர். ஏனெனில் அது கிடைக்கக்கூடிய
சிறந்த பொருள்களிலிருந்து வெகு சாமர்த்தியமாகத் தயா
ரிக்கப்படுகிறது. அதன் புதிய இனிய வாசனை, ஏராளமான
நுரை, பெரிய சைஸ் (மார்க்கெட்டில் மிகப் பெரிய சோப்)
அதையே எல்லோரும் விரும்பச் செய்கின்றன.




முற்றிலும் சுத்தமானது — மிருகக்
கொழுப்பற்றதென்பதற்கு உத்தரவாதம்.

Godrej **கோத்ரெஜ்** சோப்ஸ், லிட்.
லிமிடெட்

மதராஸ்: 164, பிராட்வே: கொச்சி: 6/36, கல்வத்தி.

**தாவர எண்ணெய்களினால் சோப்பு தயாரிப்பதில் முதன்மையானவர்கள்.**

உலகெங்கும், வெற்றிபெற்ற மனிதர்கள்

# ஜில்லெட்

## உபயோகிக்கிறார்கள்...



எந்த பொருளிலும் சிறந்ததையே வழக்கமாக உபயோகிக்கும் மனிதர்கள் ப்ளூ ஜில்லெட் பிளேடுகளைத்தான் உபயோகிக்கிறார்கள். பணத்தால் இதைவிட சிறந்ததை வாங்கமுடியாது. நீடித்த காலம் உழைப்பதும், மிகவும் கூராக தீட்டப்பட்டதுமான ப்ளூ ஜில்லெட் பிளேடுகள் உங்கள் தாடியை சுலபமாக நீக்கிவிடுகின்றன. ஆயினும் அதன் விலை மிகவும் சரசமாயிருக்கிறது. அதனால் ஒவ்வொரு மனிதனும் ஒரு தனவந்தனைப் போலவே க்ஷவரம்செய்துகொள்ளலாம்.



# ப்ளூ ஜில்லெட் பிளேடுகள்

5 பிளேடுகளுக்கு 14 அணா

# இரண்டு வைத்தியர்கள்

துரோணன்

அந்தி மயங்கும் நேரம். ஷியாம் சுந்தர் அந்த வட்டாரத்திற்கு வந்தபோது ரொம்பவும் பீதியடைந்து விட்டார். அவர் இதயத்திலிருந்த வீம்பும் குருட்டுத் தைரியங்களும் மாறி அவருக்கு அழுகையே வந்து கொண்டிருந்தது. வேங்கை, புலி இவைகளின் ஓயாத உறுமல்கள் கேட்டுக் கொண்டிருந்த அந்தக் காடு ரொம்பவும் பயங்கரமாகத் தானிருந்தது. ஒரு பெரிய மரத்துக்குச் சமீபமாக இருந்த அந்தக் குடிசையில் இலேசாக 'மூணுக் மூணுக்'கென்று ஒரு தகர விளக்கு எரிந்து கொண்டிருந்தது. எங்கிருந்தோ வந்து கொண்டிருந்த ஒரு பேரிரைச்சலைக் கேட்டுக் கொண்டே அவர் சற்று ஸ்தம்பித்து நின்றார். அடுத்த நிமிஷம் 'ஹோ ஹோ' என்ற பரிகாச நகைப்புடன் எதிரிலிருந்த குடிசையினின்றும் ஒரு கிழவன் வெளிப்பட்டான். ஷியாம் அவன் உருவைக் கண்டு திகைப்புடன் நின்று விட்டார்.

அவன் பெயர் 'ஜிங்கிலி.' அவன் முகத்தில் மட்டும் சற்றுக் கிழக்களை யிருந்ததே யன்றி, அவனது தேகக் கட்டு சற்றும் குலையாமல் வாட்ட சாட்டமாக இருந்தது. அவனது அகன்ற விழிகள் நெருப்புப் போன்றிருந்தன. மற்றபடி—வலது கையில் ஒரு பெரிய தாயத்து, இடுப்பில் மானத்தைக் காத்து நின்ற ஏதோ ஒரு மிருகத்தின் தோல்—நிமிர்ந்த நடை—இவைதான் அவனது தோற்றம். அவன் வேகமாக வந்து அவரிடம் நின்று சற்றுநேரம் ஏற இறங்கக் கவனித்தான். பின்னர், என்ன நினைத்துக் கொண்டானோ, தனது வலது கைச் சுண்டு விரலை அவரிடம் நீட்டினான். ஷியாம் ஒன்றும் புரியாமல் திகைத்தார். பாவம்! மரியாதையுடன் விருந்தாளியை வரவேற்பதற்குரிய அவனுடைய பரிபாஷை அது என்பதும், அவர் அதைப் பிடித்துக் கொள்ள வேண்டுமென்பதும் அவருக்கென்ன தெரியும்? இருந்தும், அவன் ஒரு பரிகாச நகைப்பை விடுத்துக் கொண்டே அவரது கரத்தைப் பற்றி யழைத்தான். அவரும் பசுப்போல் மௌனமாகத் தொடர்ந்தார். அவனுடைய பிடியில்தான் எப்படிப்பட்ட இரும்புச் சக்தி!

அவனது குடிசையின் உட்புறத் தோற்றம் அவருக்கு ரொம்பவும் விசித்திரமாகத்தானிருந்தது. மேலே ஒரு கொடி. அதில் சிங்கத்தின் பிடரி மயிர்—கொத்துக் கொத்தாகச் சௌரிபோல் உலர்த்தப் பட்டிருந்தன. அதன் பக்கத்தில் ஒரு பரண். அதில் என்னென்னவோ—அவர் பார்த்திராத தளவாட சாமான்கள். சுற்றிலும் யானைத் தந்தங்களும், மான் கொம்புகளும் இறைப்பில் செருகியிருந்தன. ஏதேதோ மிருகங்களின் நரம்புகளெல்லாம் வேறு சரம் சரமாகக் கயிறுபோல் தொங்க விடப்பட்டிருந்தன. அப்புறம், உளி போன்ற புலிப்பற்கள் வாசற்படிக்கு மேல் தோரணம் போன்று நரம்புக் கயிற்றில் கோத்துக் கட்டப்பட்டிருந்தன. ஒரு மூலையில் காட்டுப்புறத்துக் காய்களும், தழைகளும் ஒரு குவியலாகக் குவிக்கப்பட்டிருந்தன. மற்றபடி, தரையெங்கும் குப்பையும் கூளங்களும்தான்.

அவன் அவரை நோக்கி ஏதோ ஒரு பாஷையில் ஒரு கேள்வியைப் போட்டான். நல்லவேளையாக, அவனது கைகளும் சைகை செய்தபடியால் புரிந்து கொண்டார். அதாவது, ஆகாரம் சாப்பிடுகிறீர்களா என்பது தான் அவனது கேள்வி. அவர் வேண்டாமென்று கூறிக்கொண்டே தம் முதுகின் மூட்டையிலிருந்த பெட்டியைத் திறந்து அதிலிருந்த ரொட்டித் துண்டுகளை யெடுத்தார். அவன் அதை ஏதோ ஒரு விசித்திர வஸ்துவைப்போல் அதைப் பார்த்தான். பின்னர், அதைக் கையில் வாங்கி முகர்ந்து பார்த்தான். அவர் சமிக்ஞை செய்தவுடன் அவன் அதை வாயில் போட்டுக்கொண்டு மகிழ்ச்சியால் தன் புஜங்களைத் தட்டிக் கொண்டான். அவரும் ஆச்சரியத்துடன் அதை ரஸித்தார். பின்னர், அவனும் எழுந்து சென்று மூலையிலிருந்த கறுப்பான காய்களில் சிலவற்றை யெடுத்து அவரிடம் போட்டான். அவர் அதை வெட்டிப் புசித்தபோது—தம் ஆயுளிலேயே கண்டறியாத ருசியைக் கண்டார். பின்னர், அவருக்கு ரொம்பவும் களைப்பு ஏற்பட்டது. கொட்டாவி விட்டுக் கொண்டே அதை




"என் பையன் என்னுடைய தங்கப் பொத்தானை விழுங்கி விட்டான், ஸார்! நம்ம டாக்டர் சுப்பராவிடம் அழைத்துக் கொண்டு போகட்டுமா? அவர் எப்படி?"

"ரொம்ப நல்ல மனிதர். பொத்தான் கிடைத்ததும் கொடுத்து விடுவார். அவர் நிச்சயமாகத் தம்மிடம் வைத்துக் கொள்ள மாட்டார்!"

அவனிடம் தெரிவித்தார். அவன் சரசர வென்று எழுந்து, மேலே பரணிலிருந்த தட்டுமுட்டுச் சாமான்களை அப்புறப்படுத்தி விட்டு, சில மிருகத் தோல்களை யெடுத்து அதில் விரித்தான். பின்னர் ஏதேதோ கூறினான். அது அவருக்குப் புரியவில்லை. தன் மூட்டையைத் தூக்கி அதில் போட்டுக் கொண்டு அதில் படுத்தார். அவரது கண்கள் சுழன்று கொண்டிருந்தன.

ஷியாம்சுந்தர் ஐக்கிய மாகாணத்தில் ஒரு பிரபல டாக்டர். அவரது பன்னிரண்டு வருஷ அனுபவமும், புது முறையான மருந்து உபாத்திகளிலும், ஆராய்ச்சிகளிலுமே சென்றிருந்தன. அவரைச் சேர்ந்த நண்பர்கள் அநேகர். அவர்களுக்கெல்லாம் இவரிடம் ஒரு அலாதி மதிப்பும், கண்ணியமும் உண்டு. இருந்தும், இவருடைய சில முரட்டுப் பிடிவாதங்களினாலும் வீண் சர்ச்சைகளினாலும் அவர்களுக்குள் அடிக்கடி மனஸ்தாபங்கள் ஏற்படுவதுண்டு. அப்படி யேற்பட்ட ஒரு விவாதத்தின் வீம்புதான் இன்று அவர் காட்டுக் குடிசையில் பீதியுடன் பதுங்கும்படி நேரிட்டது!

ரசாயனக் கூடத்தில் ஒரு குறிப்பிட்ட மருந்து பற்றி ஆராய்ச்சி நிகழ்ந்து கொண்டிருந்தது. அதன்பின்னர் விவாதமும் ஆரம்பமாயிற்று. அந்த மருந்துக்கான மூலப்பொருள் சிறுத்தைப் புலியின் விலா எலும்புகள்தாம். இதை யெப்படிச் சேகரித்துச் சோதனை நடத்துவது? அரசாங்கத்துக்கு எழுதிச் சுலபமாகத் தருவித்து விடலாமென்று நண்பர்கள் ஏகமனதாகக் கூறினார்கள். ஆனால், ஷியாம் இதை ஒப்புக் கொள்ள வில்லை. தாமே இதைக் கொண்டு வந்து விடுவதாகவும், தாம் ஏற்கெனவே காட்டிலாகாவில் உத்தியோகம் வகித்தபோது, தமக்கு எவ்வளவோ அனுபவம் உண்டென்றும் கர்வத்துடன் கூறினார். நண்பர்களோ ஏளனமாக நகைத்தனர். அதே கணம் ஷியாமின் உள்ளத்தில் ரோஷமும், வீம்பும் பெருக்கெடுத்தன. மறு தினமே ஐம்பது மைல்களுக்கு அப்பாலிருந்த 'பாண்டுராக்' காட்டிலிருந்து கொண்டு வந்து விடுவதாகச் சபதம் கூறினார்.

இரண்டு உடுப்புகள், நாலைந்து தினங்களுக்கான ரொட்டி, சில சில முக்கியமான ஊசி மருந்துகள், கை ரிவால்வர்—இத்தியாதி மூட்டைகளுடன், டாக்டர் தம் மோட்டார் சைக்கிளில் பிரயாணத்தைத் துவக்கினார். குகையைக் கடந்ததுமே, வாகனத்தைப் பூட்டி ஒரு பந்தோபஸ்தான இடத்தில் வைத்து விட்டு, மூட்டையை முதுகில் சுமந்து கொண்டு கிளம்பினார். பதினைந்து மைல்களை ஒரே பகலில் ஓட்டிவிட்டு, இந்த விடத்திற்கு வந்தபோதுதான் அவருக்குத் தம் சபதத்தைப் பற்றிய முட்டாள்தனமும் பயமும் சூழ்ந்து அவரது இதயத்தை வாட்டின.

முன்னிரவுப் பொழுது சென்றுவிட்டது. காட்டு விலங்குகளின் கோர சப்தங்கள்கூட



அறியாமல் ஷியாம் பரண் மீது கண் அயர்ந்து நித்திரை செய்து கொண்டிருந்தார். திடீரென்று தம் சமீபமாக ஏற்பட்ட அதிர்ச்சியினின்றும் அவரது விழிகள் திறந்து கொள்ளக் கீழே நோக்கினார். அங்கே நிகழ்ந்து கொண்டிருந்த காட்சியினால் அவரது இதயமே நின்றுவிடும்போ லிருந்தது.

மிருகக் கொழுப்பில் எரிந்து கொண்டிருந்த விளக்கு குடிசைக்குள் மிகப் பிரகாசமாகத்தானிருந்தது. 'வீல்' என்ற பயங்கரமான ஒலியும், உறுமல்களும் அந்தக் குடிசையை அதிரச் செய்து கொண்டிருந்தன. மண்டி யிட்டபடியே உட்கார்ந்து தன் பக்கத்திலிருந்த சிறுத்தைப் புலியின் கால் முள்ளை யெடுப்பதற்காக ஒரு புலி நகத்தால் கீறிக் கொண்டிருந்தான் டாக்டர் ஜிங்கிலி! வலி தாங்காத அந்த மிருகத்தின் ஓலக் குரல் அந்த நிசி வேளையைக் குலைத்து எதிரொலித்துக் கொண்டிருந்தது. இடையிடையே அவன் அதனிடம் ஏதோ கூறிக் கொண்டிருந்தான். ஒரு வழியாக, அவன் அந்த முள்ளைப் பிரயாசைப்பட்டு எடுத்தவுடன், அந்த மிருகம் ஒரு தடவை பெருமூச்செறிந்தது. பிறகு, நன்றியுடன் தன் வாலினால் அவனைச் செல்லமாகத் தட்டியது. ஷியாம் மூச்சுக்கூட விடாமல் ஒட்டிய வண்ணம் கவனித்தார். அடுத்த கணம் அந்த

மிருகம் செய்த செய்கையினால், அவரது இதயமே நின்றுவிடும் போலாகி விட்டது! சொஸ்த மடைந்த களிப்புடன் சிறுத்தை நாலாபுறமும் மோப்பம் பிடித்த பின்னர், அண்ணாந்து நோக்கி ஆர்வத்துடன் வாயைப் பிளந்தது. சிவந்த அபாயக் குறி போன்ற அதன் விழிகளைக் கண்டபோது ஷியாம் 'ஓ'



வென்று கூச்சலிடவே எண்ணினார். • ஆனால் பாவம், அவரது நல்ல காலமோ என்னவோ, அவரது கண்டத்தினின்றும் ஒலிதான் கிளம்பவில்லை. ஜிங்கிலி அதன் முதுகில் ஓங்கி ஒரு குத்து விட்டுக் கொண்டே, கடுமையாக ஏதோ கூறினான். அடுத்த கணம் சிறுத்தை வெளியேறிவிட்டது. ஷியாம் வியர்வை வெள்ளத்தில் மிதந்து கொண்டிருந்தார். கீழே ஜிங்கிலியின் முரட்டுத் தொண்டையினின்றும் சங்கீதம் முழங்க ஆரம்பித்தது! அவன் குதூகலத்தில் ஆழ்ந்திருந்தான்!

* * *

ஷியாம் அந்தக் குடிசைக்கு வந்து ஒரு முழுப் பகலும் கூடச் சென்றுவிட்டது. தாம் வந்த காரியத்தை எப்படிச் சாதித்துக் கொள்வது என்பதுதான் விளங்கவில்லை. ஏனெனில் கட்டுக்கோப்பான அந்தக் காட்டு மிருகங்களின் ஒற்றுமையையும், அவைகளுக்கொரு ஆஸ்தான வைத்தியரையும் கண்கூடாகக் கண்டவுடன் அவருக்கு ஒன்றும் புரியவில்லை. முக்கியமாக, தாம் வந்த காரியம் இன்னதென்றும், தம்மிடம் ரிவால்வர் இருப்பது பற்றியும் ஜிங்கிலிக்குத் தெரிந்து விட்டால் என்னவாகுமோ வென்று கூட அவர் அஞ்சினார். அம்மாதிரி அவருக்கு உண்டான அச்சமும் ஊகமும் சரியானவைதான் என்பதை அவர் பின்னர் தெரிந்து கொண்டார்.

முற்பகலில் எங்கேயோ சுற்றி விட்டு, கையில் சிற்சில கிழங்குகளையும், இரண்டு மான் கொம்புகளையும் எடுத்துக் கொண்டு உள்ளே நுழைந்தான் ஜிங்கிலி. அவர்களுக்குள் சம்பாஷணை துவக்கமாயிற்று. அதாவது அவர் மராத்தி பாஷையையும் அபிநயத்தையும் கலந்து கேள்விகள் கேட்டார். அவன் ஏதோ ஒரு அமர பாஷையோ, அசுர பாஷையோ உபயோகித்துக் கையாட்டி விளக்கம் கூறினான்! கொஞ்சம் சிரமத்துடனே தான் அவனது வரலாற்றை அவர் தெரிந்து கொண்டார்.

ஜிங்கிலிக்குத் தன் தாய் யார் என்று தெரியாது. அவனறிந்த வரையில்—இந்தக் காட்டுப்புறம், குடிசை, இருபது வயது வரையில் தன்னுடனிருந்த தகப்பன், அவனையொட்டிய அநாகரிகமான பழக்கங்கள் — இவைதாம். அவனது வலது கையிலிருந்த தாயத்து ஏதோ ஒரு மந்திர சக்தியுடன் வம்ச பரம்பரையாக வந்து, தன் தகப்பன் தன் கையில் கட்டி விட்டதாக அவன் கூறிக் கொண்டான். யானையின் கடைவாய்ப் பல்லினால் செய்து புலி நகங்களுடன் கோத்திருந்த அதனுடைய சக்தியைப் பற்றி அவன் வெகுவாகக் கூறிக் கொண்டான். மேலும், அந்தத் தாயத்து கையிலிருக்கும் வரையில் எந்த மிருகமும் தன்னிடம் நாயாகத்தானிருக்குமென்றான்.

அவனது தகப்பனது காலத்தில் எவ்வளவோ வேட்டைக்காரர்களும், அதிகாரிகளும் அவ்விடம் வந்திருக்கிறார்கள். ஆனால், யாரும் உயிருடன் திரும்பிச் சென்றதில்லை. காரணம், அவர்களுடைய தோளிலிருக்கும் துப்பாக்கியைக் கண்டவுடனேயே தகப்பன் எவ்வளவோ புத்தி கூறி எந்த மிருகத்தையும் கொல்லாமல் செல்லும்படி கேட்டுக் கொள்வான். அவர்கள் மறுத்தோ அல்லது நயவஞ்சகமாகவோ நடந்து கொண்டால், அவனது ஒரு கூக்குரல் வெளியாகி, காட்டில் உள்ள அவ்வளவு மிருகங்களும் அங்கு கூடிவிடும். இந்தச் சம்பவம் குறித்தும், ஷியாம் அவனிடமிருந்து தெரிந்து கொண்டார்.



"நான் இன்றைக்கு இரண்டணா லாபம் சம்பாதித்தேன்!"

"எப்படி?"

"சென்ட்ரல் ஸ்டேஷனிலிருந்து ஒரு டிராம் வண்டியின் பின்னாலேயே நடந்து மயிலாப்பூர் போய் விட்டேன். அது இரண்டணா லாபம்தானே?"

"நீ தவறு செய்துவிட்டாய்! ஒரு டாக்ஸியின் பின்னால் ஓடியிருந்தால் இரண்டு ரூபாய்க்கு மேல் லாபமாயிருக்குமே!"

---

முதல் நாளிரவு விசேஷம் எதுவுமின்றிக் கழிந்தது.

காலை முதல் ஜிங்கிலி படுத்துப் புரண்டவாறே ஏதோ அவஸ்தையுடன் காணப்பட்டான். ஷியாம் அவனை யணுகி விசாரித்த போது, தனக்கு வயிற்று வலி யென்பதை விளக்கினான். அக்கணத்தில் அவருக்கு ஒரு யோசனை உதயமாயிற்று. தமது தேட்டையை முடித்துக் கொள்ளும் தருணம் நெருங்கி விட்டதாக அவர் தீர்மானித்துக் கொண்டார். பின்னர், பரபரப்புடன் சென்று, தம் பையிலிருந்த 'இஞ்செக்ஷன்' ஊசியில் மயக்க மருந்தை நிரப்பிக் கொண்டு அவனை அணுகினார். அவரது உள்ளம் மட்டும் இச் செய்கை பற்றிப் பீதியுடன் போரிட்டுக் கொண்டிருந்தது. சில நிமிஷங்களிலேயே நம்பிக்கையுடன் சற்றுக் கண்ணயர்ந்தான் ஜிங்கிலி.

ஷியாம் பரபரப்புடன் தம் மூட்டைகளைக் கட்டிக் கொண்டு, அவனது கையிலிருந்த தாயத்தை அவிழ்க்க ஆரம்பித்தார். ஒரு சுற்று அவிழ்த்தார்—ஆனால், பரிதாபம்! முதல் நாளிரவு வந்து விட்டுச் சென்ற அதே சிறுத்தைப் புலி எதிர்பாராதபடி அவரெதிரில் வந்து கொண்டிருந்தது! ஷியாம் வாய் விட்டலறிக் கொண்டே பரண் மீது தாவினார்! அவரது இதயம் ஒரு வினாடிக்குப் பல ஆயிரம் மைல் வேகத்துடன் துடித்துக் கொண்டிருந்தது. வீழ்ந்த மிருகமோ படுத்திருந்த ஜிங்கிலியைச் சுற்றிச் சுற்றி வந்து முகர்ந்து பார்த்துக் கொண்டே, மேலே நின்ற ஷியாமையும் நோக்கிப் புன்னகை பூத்தது.

ஷியாமின் உள்ளத்தில் தற்காப்பைப் பற்றிய போர் எழுந்தது. அவரது கை இடுப்பைத் துழாவிற்று. 'டுமீல், டுமீல்' என்ற சப்தமும் புகையும் வெளியாகி அந்தக் காட்டிடையே எதிரொலி செய்தது. கோர சப்தத்துடன் சிறுத்தைப் புலி ஜிங்கிலியின் சமீபமாகச் சாய்ந்தது. அதே நிமிஷம் உடம்பை உதறிக் கொண்டே எழுந்து விட்டான் ஜிங்கிலி.

தன் சூழ்நிலையினின்றும், ஷியாமின் சூழ்ச்சியை ஜிங்கிலி அறிந்து விட்டான். அவன் உள்ளத்திலும் ஆக்ரோஷம் கொந்தளித்துக் கொண்டுதா னிருந்தது. இருந்தும், டாக்டர் ஷியாமின் கவர்ச்சிகரமான முகம்தானோ என்னவோ—அந்தக் காட்டு பிராண்டியின் உள்ளத்தில் பச்சாத்தாபம் ஏற்பட்டது. அவரது கையிலிருந்த துப்பாக்கியைத் தந்திரமாக வாங்கிக் கொண்டபின், பக்கத்திலிருந்த ஏதோ ஒரு ஆயுதத்தால் அவரது வலது கைக் கட்டை விரலை மட்டும் வெட்டி யெடுத்து விட்டுப் பேரிரைச்சலுடன், கருணை பிரதிபலிக்க நகைத்தான்! வேதனையும் வெட்கமும் பொங்க ஷியாம் பரிதாபமாகத் துடித்தார்.

அப்பொழுது ஜிங்கிலி அவரைப் பார்த்து, சைகை மூலமாகவும் சில சொற்கள் மூலமாகவும் சொன்னான். டாக்டர் ஷியாம் அதைப் புரிந்து கொண்டார். அது பின்வருமாறு அவர் இருதயத்திலேயே தாக்கியது:

"ஐயா, நீர் என் விருந்தாளி. சில நாட்கள் என் வீட்டில் என்னுடன் தங்கியிருந்து பழகி, பிறகு, உண்ட வீட்டுக்கு இரண்டகம் நினைத்துவிட்டீர். செய்த காரியத்துக்குத் தண்டனை உம்மை இந்த உலகத்தை விட்டு மேல் உலகத்துக்கு அனுப்பி விடுவதுதான். ஆனால் விருந்தாளி என்ற காரணத்தினால் அவ்விதம் செய்ய என் மனம் சம்மதிக்கவில்லை. ஆனால் உமக்கு ஒரு உத்தரவு. உடனே நீர் இந்தக் காட்டை விட்டுப் போய்விட வேண்டும்!"

ஷியாம் உடனே அந்தக் குடிசையை விட்டுக் கிளம்பினார். தமது செயலுக்கு மன்னிக்கும்படி ஜிங்கிலியிடம் அவர் எவ்வளவோ கூறினார். ஆனால், அவன் புரிந்து கொண்டானோ, என்னவோ! அந்தச் சிறுத்தையின் உடலை ஒரு தோலினால் சுற்றியெடுத்துக் கொண்டு அவனும் அவரைத் தொடர்ந்து பாதி தூரம் வரையிற் சென்று விட்டுத் திரும்பினான். அவரைப் பிரியும் பொழுது தனது கைகள் இரண்டையும் நீட்டி அதில் தட்டுமாறு அவன் கேட்டுக் கொண்டான். டாக்டர் ஷியாமும் அவ்வாறே செய்து விட்டு மேலே நடந்தார்.

* * *

டாக்டர் ஷியாமின் வேட்டை வெற்றியைக் குறித்து, ஆராய்ச்சிக் கூடத்தில் அவரது சகாக்கள் சிலாகிக்காமல் இல்லை. வெளிப்படையாக அவர் எவ்வளவோ கூறிக் கொண்டும், அவரது உள்ளம் மட்டும், தமது புனர் ஜன்மத்தின் இரகசியம் பற்றிக் கேலி செய்து கொண்டிருந்தது. அத்துடன்—தாம் இனிப் பெற முடியாததும், இது வரை தம் புகழுக்குக் காரணமானதும், தம் ஆராய்ச்சிக்கு முக்கியமானதுமான தம் கட்டை விரலின் நஷ்டத்திற்குக் காரணமான வீம்பின் தீம்பைப் பற்றி அவரது உள்ளத்தில் என்றும் நீங்காத ஏக்கம் குடியேறி விட்டது!

பாப்பா மலர்

# ராமுவும் பட்டுவும்

பி. எஸ். மணி

ராமுவும், பட்டுவும் பள்ளிக்கூடம் போய்க் கொண்டிருந்தார்கள். போகும் வழியில் ஒரு பிரபுவினுடைய பெரிய பங்களா இருந்தது. அந்தப் பங்களாவில் மாமரங்களும் கொய்யா மரங்களும் நிறைய இருந்தன. கொய்யா மரத்தில் கொய்யாப் பழங்கள் நிறையக் காய்த்துத் தொங்கின. அவைகளைத் தின்ன வேண்டும் என்ற ஆவலில், "அண்ணா! கொய்யாப் பழங்கள் பறித்துத் தா!" என்று கெஞ்சினாள் பட்டு.

"கொய்யாப் பழமா? ஐயோ! இந்தப் பங்களாவின் சொந்தக்காரர் ரொம்பப் பொல்லாதவராயிற்றே!" என்றான் ராமு.

"அண்ணா! இந்தப் பங்களாவில் யாரும் இருப்பதாகத் தெரியவில்லையே? பறித்துத் தா, அண்ணா!" என்றாள் பட்டு. பட்டுவின் ஆசையை ராமுவினால் தட்டிக் கழிக்க முடியவில்லை.

ராமு தன் தங்கையின் ஆசையைப் பூர்த்தி செய்வதற்காக அந்தப் பிரபுவின் தோட்டத்துக்குள் நுழைந்து கொய்யா மரத்தின் மேல் ஏறினான். பட்டு அவனுடன் கீழே நின்று அவன் ஏறுவதைப் பார்த்துக் கொண்டிருந்தாள். அவளுக்குக் கொய்யாப்பழம் தின்னப் போகிறோம் என்பதில் ஏற்பட்ட ஆனந்தம் கொஞ்சநஞ்சமல்ல. அந்த ஆனந்தத்தில் அவளையுமறியாமல், "அண்ணா! அதோ பார், அந்தக் கிளையில் பழுத்த பழம் இருக்கிறது. அதைப் பறித்துப் போடு!" என்று கத்தினாள் பட்டு.

"உஷ்! சத்தம் போடாதே!" என்று ராமு எச்சரித்ததையும் பொருட்படுத்தாமல் இன்னும் உரத்த குரலில் கத்தினாள் பட்டு. அவள் போட்ட சத்தம் அந்தப் பங்களாவின் உள்ளே போய்க் கேட்டது. இல்லா விட்டால் அந்தப் பங்களாவின் சொந்தக்காரரான பிரபு ஓடி வருவாரா?

தோட்டத்தில் ஏதோ சத்தம் கேட்பதை அறிந்த அந்தப் பொல்லாத பிரபு பங்களாக்குள்ளிருந்து தோட்டத்துக்குள் ஓடோடி வந்தார். பங்களாவிலிருந்து யாரோ தங்களைப்பிடிக்க ஓடிவருவதைக் கண்டு பட்டு பதறிப்போய், "ஐயோ! அண்ணா! சீக்கிரம் இறங்கு! யாரோ நம்மைப் பிடிக்க ஓடி வருகிறான்!" என்றாள்.

அதைக் கேட்டதும் ராமு விடு விடென்று மரத்திலிருந்து கீழே இறங்கினான். பிறகு அவன் உரத்த குரலில், "பட்டு! நீ முதலில் ஓடிப் போ!" என்று கத்தினான். ஆனால் பட்டு ஓடவில்லை. ராமு மரத்திலிருந்து இறங்கி வருவதற்குள் அந்த முரட்டு மனிதர் வந்து இருவரையும் இரும்புப் பிடியாகப் பிடித்துக் கொண்டார். அவர் கோபத்துடன், "உங்களுக்கு என் தோட்டத்தில் நுழைந்து பழம் பறிக்க அவ்வளவு தைரியம் வந்துவிட்டதா? உங்களை என்ன செய்கிறேன், பார்?" என்று கூறி அவர்கள் இருவரையும் இழுத்துச் சென்றார். பட்டுவின் அழுகை அதிகமாயிற்று. ராமுவின் கண்களிலும் கண்ணீர் வந்தது.

அவர் அவர்கள் இருவரையும் இழுத்துச் சென்று ஒரு அறையில் தள்ளிப் பூட்டினார். "இருவரும் உள்ளேயே கிடந்து தவியுங்கள். நீங்கள் செய்த குற்றத்துக்கு இது தான் சரியான தண்டனை" என்று கூறிவிட்டு அவர் எங்கேயோ வெளியே போனார். பட்டு விம்மி விம்மி அழுதாள்.





ராமு அவளைத் தேற்றினான். அவன் என்ன தேற்றியும் அவள் அழுகை சிறிதும் நிற்கவில்லை.

திடீரென்று யாரோ பூட்டைத் திறக்கும் சத்தம் கேட்டது. பட்டு, "அண்ணா! அவர் வந்து விட்டார்போலிருக்கிறது" என்று சொல்வதற்கு வாயெடுத்தான். அதற்குள் ராமு அவள் வாயைப் பொத்தி, "சத்தம் போடாதே!" என்று சைகை காட்டினான். அவளைப் பிடித்து இழுத்துக் கொண்டுபோய் ஒரு மறைவில் ஒளிந்து கொண்டான்.

இரண்டு வாட்ட சாட்டமான மனிதர்கள் பூட்டைத் திறந்து கொண்டே உள்ளே நுழைந்தார்கள். அவர்களில் ஒருவன், "பேஷ்! இன்று நமக்கு வேட்டைதான். பிரபு வீட்டார் ஒருவரும் வீட்டிலில்லை. கொள்ளையடிக்கத் தகுந்த சமயம்!" என்றான். மற்றவன் "உஷ்! இரைந்து பேசாதே!" என்றான்.

பிறகு இருவரும் அந்த அறையிலிருந்த பீரோக்களையும் பெட்டிகளையும் சோதனை போடத் தொடங்கினார்கள். பட்டுவும் ராமுவும் இதுதான் சமயமென்று அறையை விட்டு வெளியே வந்தார்கள். உடனே ராமு கதவைச் சாத்திப் பூட்டை மாட்டிப் பூட்டி விட்டான்!

உள்ளே பணப் பெட்டியைத் தேடிக் கொண்டிருந்தவர்கள் கதவு தாளிடும் சத்தம் கேட்டுத் திரும்பிப் பார்த்தார்கள். அதற்குள் கதவு பூட்டப்படவே, அவர்கள் வெளியேற வழிதெரியாமல் திகைத்தார்கள்.

ராமுவும் பட்டுவும் திருடர்கள் வந்திருக்கும் செய்தியைப் பிரபுவினிடம் அறிவிப்பதற்காக ஓடோடிச் சென்றார்கள்.

பிரபு கல்யாண வீட்டிலிருந்து திரும்பி வந்து கொண்டிருந்தார். எதிரே பட்டுவும் ராமுவும் ஓடிவருவதைக் கண்டு "அட! நீங்கள் தப்பி ஓடுகிறீர்களா? உங்கள் தோலை உரித்து விடுகிறேன்" என்றார்.

ஆனால் ராமு, "ஐயா! நாங்கள் தப்பி ஓடவில்லை. உங்கள் பங்களாவில் இரண்டு திருடர்கள் வந்திருக்கிறார்கள். அவர்களை ஒரு அறையில் போட்டுப் பூட்டி விட்டோம். அதைத் தெரிவிப்பதற்காகவே நாங்கள் ஓடி வந்தோம்" என்றான்.

"என்ன? என் பங்களாவில் திருடர்களா?" என்றார் பிரபு.

"ஆமாம்! சீக்கிரம் வாருங்கள்! ஓடி விடுவார்கள்!" என்றான் ராமு.

மூவரும் திருடர்களிருந்த அறையை நோக்கி விரைந்து வந்தார்கள். பிரபு ராமுவினிடமிருந்து சாவியை வாங்கிக் கதவைத் திறந்தார். உள்ளே இரண்டு திருடர்கள் நிற்பதைக் கண்டதும் அவர்களைத் தூணில் கட்டினார். பிறகு குழந்தைகளின் சாமர்த்தியத்தைக் கண்டு வியந்தார். "பேஷ்! குழந்தைகளே! நீங்கள் எனக்குப் பேருதவி புரிந்திருக்கிறீர்கள். நீங்கள் இல்லாவிட்டால் என் பொருள்கள் எல்லாம் களவு போயிருக்கும்" என்று மகிழ்ச்சியுடன் கூறி அக்குழந்தைகளைத் தழுவிக் கொண்டார்.

"சரி! நாங்கள் வீட்டுக்குப் போகலாமல்லவா? எங்களைத் துன்புறுத்த மாட்டீர்களே?" என்று சந்தேகத்துடன் கேட்டாள் பட்டு.

"உங்களைச் சிறிதும் துன்புறுத்த மாட்டேன். இதோ இப்பொழுதே நீங்கள் வீட்டுக்குப் போகலாம்" என்றார் அவர். அதோடு பிரபு அவர்களிடம் ஒரு கூடை நிறையக் கொய்யாப் பழங்களும், நிறையக் காசுகளும் கொடுத்து அனுப்பினார்.



# வாழ்க்கையின் இன்பம் அக் கடும் தலைவலி ஒழிந்த பின்

"நான் எப்பொழுதும் தலைவலியால் அவதிப் பட்டுக் கொண்டிருந்தேன். ஒன்றிலும் குணம் கிடைக்கவில்லை. பின்னர் "க்ருஷன்" உபயோகிக்க ஆரம்பித்ததிலிருந்து எனது வலிகள் அறவே ஒழிந்து அநேக விதங்களில் குணமடைந்திருக்கிறேன். மண்டை பிளக்கும் தலைவலியால் வாழ்க்கையே வியர்த்தம் எனக் கருதினேன். ஆனால் அது இப்பொழுது முற்றிலும் வேறு விதமாய் விட்டது — "க்ருஷ"னுக்கு எனது நன்றி." —M. S.

வயிற்றைக் கோளாறு செய்வதும் ரத்தத்தை விஷமாக்குவதுமான அசுத்தங்கள் குடலுக்குள் சேமிக்கப்படுகின்றன என்பதே மண்டை பிளக்கும் தலைவலிகளின் தாத்பர்யம். உங்களது உட்புற அவயவங்களை ஆரோக்கியமாகவும் ஒழுங்காகவும் இயக்குவதால் "க்ருஷன்" அவ்விஷப் பொருள்களை வெளியேற்றி விடுகின்றது. க்ருஷன் உங்களுக்கு வலிகளிலிருந்தும் நோய்களிலிருந்தும் விடுதலை அளிப்பதால் வாழ்க்கையில் புத்துணர்வும் ஊக்கமும் அடைகிறீர்கள்.

**"க்ருஷென்"** உங்களை ஆரோக்கியமாகவும் ஆனந்தமாகவும் இருக்க உதவுகிறது

KSM—2

# வட்ட மேஜை

## சோர்வு நீக்கிய எம்மான்!

சொலல் வல்லன் சோர்விலன் அஞ்சான் அவனை
இகல் வெல்லல் யார்க்கும் அரிது. (குறள்)

நுண்ணறிவு . நூலறிவு
பண்பட்ட பகுத்தறிவு
ஆன்ற குடிப்பிறப்பு
அமையப் பெற்றவரே!
அறங்கூறும் அமைச்சர்
ஆம்!
தள்ளாத வயதில்
தளராத ஊக்கத்தால்
சொல்லால் நல்லுறவாக்கி
எங்கள்
சோர்வு நீக்கிய
எம்மானே! இராஜாஜி
வாழ்க! வாழ்க!

மன்னார்குடி
10—4—52

என். நீருஞானம்

★

## சர்க்கார் உத்தியோகஸ்தர்கள்

ஏப்ரல் 13உ. "கல்கி" இதழில் நான்காவது பக்கத்தில் 'சென்ற வாரக் கவலைகள்' என்ற தலைப்பில் வெளியிட்டிருக்கும் சித்திரத்தில் 'செக்ரடேரியட் உத்தியோகஸ்தர்கள் இனி மேல் தூங்க முடியாதே என்று கவலைப்பட்டார்கள்' என்ற விகடத்தைக் காண மிக மிக வருந்துகிறோம்.

சென்னை அரசாங்கத்தில் வேலை பார்க்கும் உத்தியோகஸ்தர்கள் தங்கள் சிரமத்தைக் கருதாது, வேலைநேரம் நீங்கப் பிற நேரங்களிலும், விடுமுறை நாட்களிலும், தம் உடல் நிலை பாதிக்கப் பட்டிருக்கும் நேரங்களிலும், அரசாங்க நெருக்கடி நேரங்களிலும் தங்கள் பணியைச் சுதந்திர நாட்டிற்காகத் திறமையுடனும் பொறுப்புணர்ச்சியுடனும் ஆற்றி வந்திருக்கிறார்கள்.

எந்த மந்திரி சபை அமைந்தாலும் எங்கள் உழைப்பு நிரம்பட்டதாயும் பாராட்டத் தக்கதாயுமிருக்கும் என்பதைத் தெரிவிக்க விரும்புகிறேன். இனி இத்தகைய விகடத்துக்குத் தங்களின் பொறுப்புணர்ந்த இதழில் இடமளிக்காமல், தாங்கள் எங்கள் மேல் தப்பான கருத்து கொண்டிருந்தால் அதை மாற்றி அமைத்துக் கொள்ளும் படிக்கும், சென்னை செக்ரடேரியேட் சங்கத்தின் சார்பாக, சங்கத்தின் காரியதரிசி என்ற முறையில் கேட்டுக் கொள்கிறேன்.

சென்னை
15—4—52

ஜே. ஜி. சம்பந்தன்

★

## வாழ்க கம்பன் புகழ்!

சென்ற வாரம் நடைபெற்ற சில நிகழ்ச்சிகள் நமது தமிழ் நாட்டின் சரித்திரத்தில் பொன் எழுத்துக்களால் பொறிக்கப்பட வேண்டிய முக்கியத்துவம் வாய்ந்தவைகள். தமிழ் நாட்டினர் இருவித சக்கரவர்த்திகளைச் சென்ற வாரம் கௌரவித்தனர். தமிழ் நாட்டின், தலை சிறந்த அரசியல் வாதியும், ராஜ தந்திரியுமான சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் அவர்களைப் பதவி என்னும் பெரும் பொறுப்பை ஏற்றுக்கொள்ளச் செய்தது ஒன்று. மற்றொன்று தமிழ் நாட்டின் தலை சிறந்த கவியாகிய கவிச் சக்கரவர்த்தி கம்பரை அவரது பிறந்த ஊராகிய, ஜன்ம பூமியாகிய தேரழுந்தூரில் கொண்டாடி மகிழ்ந்தது.

இவ்வருஷம் கம்பர் மகாநாட்டை தேரழுந்தூரில் வெகு விமரிசையாகக் கொண்டாடியதிலிருந்து, நாம் பல உண்மைகளை அறிந்து கொள்ளலாம்.

உண்ண உணவு, தங்க இடம், குளிக்கத் தண்ணீர் போன்ற அத்தியாவசியமான விஷயங்களில், இன்று உள்ள நிலைமையில், தேரழுந்தூரைப் போன்ற கிராமங்களில் தவிர, மற்ற நகரங்களில் நாம் இவ்வளவு வசதிகளையும், சௌகரியங்களையும் எதிர் பார்க்க முடியாது.

இந்த விழாவை ஒரு பொது விழாவாக நினையாமல், தேரழுந்தூர் கிராம வாசிகள் அத்தனை பேரும், தங்கள் தங்கள் வீட்டில் நடக்கும் கலியாணம் போன்று நினைத்துக் கொண்டு செய்த உபசாரங்களும், உதவிகளும் எளிதில் மறக்க முடியாதவை. எல்லாம் கம்பர் பிறந்த ஊரின் மகிமை! வாழ்க கம்பர் புகழ்! வாழ்க தேரழுந்தூர்!

திருவாரூர்
14—4—52

ஜி. ராமமூர்த்தி

★

## தேச பொக்கிஷம்!

சென்னைச் சட்டசபைக்குக் காங்கிரஸின் தலைமைப் பொறுப்பை மனமுவந்து, பெருந்தகையுடன் ஏற்றுக் கொண்டிருக்கிறார் ராஜாஜி. இது அவருடைய மாசு மறுவற்ற (பொன்) உள்ளத்திற்கு ஒரு எடுத்துக் காட்டு!

இனி நமது தேசத்திற்கு அவருடைய தலைமை நீடித்து இருக்கும் வரை எந்தவிதமான அபாயமும் ஏற்படாது. ஏனெனில்,

இடிக்குந் துணையாரை ஆள்வாரை யாரே
கெடுக்குந் தகைமை யவர்.

கடிந்து அறிவுரை கூறவல்ல பெரியாரின் துணை கொண்டு நடப்பவரைக் கெடுக்கும் ஆற்றலுள்ளவர் யார் இருக்கின்றனர் என்றார் வள்ளுவர்.

எல்லாம் வல்ல இறைவன் நீண்ட ஆயுளை என்றென்றும் அளித்து, தேச பொக்கிஷமாகிய ராஜாஜி அவர்களைப் பாதுகாப்பானாக!

புது டில்லி
4—4—52

ஆர். ராஜாமணி

★

## பிழைத்தோம்

அரசியல் அலுவல்கள் எல்லாவற்றையும் மூட்டை கட்டி வைத்துவிட்டு நிம்மதியாக ஓய்வு எடுக்க வேண்டிய இந்தத் தள்ளாத வயதில் எல்லோருடைய வேண்டுகோளையும் ஏற்றுக் கொண்டு சீரழிந்த சென்னை மாகாணத்தைப் புனர் நிர்மாணம் செய்வதற்காக மீண்டும் பொறுப்பேற்றுக் கொண்ட ராஜாஜியின் யோசனைகளைச் சிரமேற் கொண்டு அதற்கொப்ப நடந்தால் உடைப் பஞ்சமும் உணவுப் பஞ்சமும் நம்மை விட்டு ஓடி மறைந்து விடும்.

மருதூர்
12—4—52

வி. நாகராஜன்

## அந்த நாளும் வந்தது

நான் எண்ணி ஏங்கிய அந்த நாள் வந்தது. யார் தலைமை அவசியமோ, யாரால் பெருமை உண்டோ அந்த ராஜாஜியை வேண்டாம் என்றார்கள். ராஜாஜி தலைமை விழக்க வேண்டாம் என்று கதறினேம். பலன் இல்லை. ராஜாஜியின் தலைமை ஒழித்தலைக் கிடைத்தற்கரிய சந்தர்ப்பமாகக் கருதிய அரசியல் வாதிகள் நன்கு பயன்படுத்தினர்கள். மக்கள் சொல்லொணுக் கஷ்டத்தை அடைந்தார்கள். அடைந்த கஷ்டத்தாலும் காங்கிரஸ் காரர்களின் போக்கைக் கண்டும் இந் நாட்டுக்குச் சுதந்தரம் வாங்கித் தந்த மாபெரும் ஸ்தாபனமாகிய காங்கிரஸைக் கடும் விஷத்தைப் போல் வெறுத்தார்கள். இங்ஙனே மாற என்று மீண்டும் ராஜாஜி ஆட்சி ஏற்படுமா என்று ஏங்கினேன். அந்த நாளும் வந்தது. வாடிய மக்கள் வனம் பெறுவர். இழந்த பெருமையை மீண்டும் சென்னை அடையும் என்பதில் ஐயமில்லை.

விருதுநகர்
13—4—52 பி. துரைராஜ் நாடார்

★

## வாழ்க காங்கிரஸ்!

ஏழு வருடங்களுக்குப் பிறகு ராஜாஜியின் சேவை சென்னைக்குக் கிடைத்தது பற்றிப் பொது மக்கள் அளவிலா சந்தோஷமடைந்திருக்கிறார்கள். ராஜாஜியின் தலைமையில் சென்னைக் காங்கிரஸ் தூய்மை அடைந்து தமிழ் நாட்டு மக்களுக்கு நல் வழி காட்டும் என்று நம்புகிறேன். அதற்கு நாமும் தலைவருடன் சேர்ந்து ஒத்துழைத்துக் காங்கிரஸின் பெயரை மேன்மையடையச் செய்வோமாக.

சென்னை
12—4—52 எஸ். ஆர். பாமா

## விதி விலக்கா?

நடவாத காரியம் நடந்தே விட்டது. சென்னை மாகாணத்தின் நல்ல காலம் ராஜாஜி தலைமையை ஏற்றுக் கொண்டு விட்டார். அதன் மூலம் நாம் இதுவரை நினைத்துக் கொண்டிருந்ததை விட அவர் பெரிய மகான், மேதை, தியாகி என்பதை நிரூபித்து விட்டார்.

குழந்தைகள் தவறு செய்து விட்டாலும் அது கஷ்டப்படும்போது தாய் பார்த்துக் கொண்டிருப்பாளா! தாய் உள்ளம் படைத்த நம் ராஜாஜி அதற்கு விதி விலக்காக இருக்க முடியுமா!

நாம் பரிதவிக்கும் நிலை கண்டு தமக்குள்ள தியாக புத்தியினால் அறுவும் நம் வேண்டுகோளுக்கிணங்கத் தலைமையை ஏற்றார். அவருடைய தியாகத்துக்கு வணக்கம் செலுத்துகிறேன். வாழ்க ராஜாஜி!

பூதிப்புரம்
3—4—52 ம. செ. முத்துவேலு

★

## வந்துவிட்டார் நம் தலைவர்!

பொங்குகின்ற பெருமகிழ்ச்சி
வெள்ளம் காணீர்!
பொலிவுடனே நம் மக்கள்
மகிழ்தல் காணீர்!
மங்குகின்ற நம் துன்பம்
மறைந்து போக
மந்திரி யாகின்றார்
நம் மாபெரும் தலைவர்!

திருப்பாப்புலியூர்
4—4—52 கி. சுப்பிரமணியம்

# தரத்தில் சிறந்த ஸோப்




# அளவில் பெரிய ஸோப்

**ஆகவே உங்களுக்கும் உங்கள் வீட்டினருக்கும் உகந்தது**

காந்தியின் சிறப்புக்குக் காரணம் அது மிக நூதனமான தொடர்ச்சி உற்பத்தி யந்திரத்தில் தயாரிக்கப்பட்டது. இம்மாதிரி யந்திரம் ஆசியாவிலேயே ஒன்றுதான்.

காந்தி பிரசித்திபெற்ற இதர ஸோப்புகளைவிட அளவில் பெரியதா யிருக்கக் காரணம் ஸோப் உற்பத்தியில் அனுஷ்டிக்கப்படும் சிக்கனத்தின் பயனாக உங்கள் பணத்திற்கு அதிக அளவு ஸோப் கிடைக்கிறது.

காந்தி சிறந்த நறுமணமுள்ளது; சருமத்தில் சுகந்த மணம் வீசச் செய்யும்.

# காந்தி

**ஸ்வஸ்திக் காந்தி டாய்லெட் ஸோப்**

சரும ஆரோக்யத்திற்கும் வாலிப வனப்பிற்கும் உகந்தது

**ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிமிடெட், வடாலா, பம்பாய்**

SOM 175




## 320. பூமியா புரளுகிறது!

இந்திரஜித்து போருக்குப் போனான் என்றால், யாருக்குமில்லாத படையோடும் பரிவாரங்களோடும் அபூர்வமாக அமைத்த தேரில் ஏறிப் போனான் என்பது விஷயம்.

தேர் வருகிற சப்தத்தைக் கேட்டான் லக்ஷ்மணன். இந்திரஜித்துத்தான் வருகிறான் என்று தெரிந்து கொள்ளுகிறான். யுத்தத்துக்குத் தயாராகிறான். அநுமனுடைய தோளில் ஏறிக் கொள்ளுகிறான்.

இந்திரஜித்தின் தேர் போர்க் களத்துக்கு வந்து விட்டது.

போர் ஆரம்பமாகிறது. லக்ஷ்மணனுக்கு என்றுமில்லாத வீராவேசம் பிறந்து விட்டது. அம்புகளைச் சரமாரியாகப் பிரயோகித்தான். இந்திரஜித்தின் ஆயுதங்கள் எல்லாம் ஒவ்வொன்றாய் முறிந்தன.

தேர் அழிந்தது; ஒரு கையும் வில்லுமே அறிந்து விழுந்தன. அதன் மேல் சூலாயுதம் சுக்குச் சுக்காய் நொறுங்கிப் போயிற்று. கடைசியாக, எய்த பிறைச் சந்திர பாணத்தால் இந்திரஜித்தின் தலை அறுந்து தரையில் விழுந்தது. இந்திரஜித்தின் காரியம் முடிந்தது.

லக்ஷ்மணனும் சுக்ரீவன், அநுமன் முதலியோர்களும் ராமனிருந்த பாசறையை நோக்கிப் போகிறார்கள்.

போர்க்களத்தையும் போரையும் ஒப்படைத்து விட்டுப் பாசறைக்குப் போய் அமைதி பெற இருந்த ராமனுக்கு அப்படியாக அமைதி வந்துவிடவில்லை.

மனசில் கவலைதான். மாயங்களில் வல்லவனை இந்திரஜித்தை வென்று மீள வேண்டுமே லக்ஷ்மணன் என்று சிந்தித்துக் கொண்டே இருந்தான். அவனிடம் வெற்றியோடு மீளுகிறார்கள் லக்ஷ்மணன் முதலியோர். இனி:

• • •

போர்க்களத்தில் எஞ்சியவர்கள் இந்திரஜித்து மாண்ட செய்தியை ராவணனிடம் சொல்ல இலங்கை நகரத்துக்குள் செல்கிறார்கள். அரண்மனையை அடைந்தார்கள், ராவணனையும் பார்த்துக் கொண்டார்கள். ஆனால் ராவணனைக் கண்டதும் பயம் வந்து விட்டது. உடல் எல்லாம் நடுங்குகிறது; சொல்ல நா எழவில்லை.

"ஏன் இந்த பயம்?" என்று கேட்டான் ராவணன். வயசான தூதர்கள் சொன்னார்கள்: "ஐயோ, இல்லையென்று ஆய் விட்டானே இந்திரஜித்து!" என்று நடு நடுங்கி அலறினார்கள்.

அவ்வளவுதான்! ஒரு கோபம் பிறந்தது ராவணனது உள்ளத்தில். அப்படியே கையில் இருந்த வாளை அவர்கள் மேல் வீசினான். வாள் எங்கேயோ போய் விழுந்தது.

அடியற்ற மரம்போல் ராவணன் தடார் என்று தரையில் விழுந்தான். அப்படியும் இப்படியுமாகப் புரண்டான்.

புரண்டதைப் பார்க்கும்போது நிலமும் உடன் புரண்டது போல்த் தோன்றுகிறது. ஆதிசேஷனும் தாங்க முடியாமல் பலங்கெட்டு அசைகிறுனே என்று சொல்லத் தோன்றுகிறது.

படம் பிறங்கிய
பாந்தளும் பாரும்பேர்ந்(து)
இடம்பி றழ்ந்து
வலம்பிறழ்ந்(து) சட்ற,—
உடம்(பு)இ றங்கிக்
கிடந்(து)உழைத்(து), ஓங்குநி
விடம்பி றந்த
கடலனை வெம்பினன்.

[படம் பிறங்கிய பாந்தளும் பாரும்: எண்ணிறந்த படங்களோடு கூடிய ஆதிசேஷன் பூமி மேல்; பேர்ந்து இடம் பிறழ்ந்து வலம் பிறழ்ந்து சட்ற: நிலை கெட்டு இடது பக்கமும் வலது பக்கமும் பிறழ்ந்து வலி கெட்டுத் தவிக்க.

உடம்பு இறங்கிக் கிடந்து உழைத்து: நெடிய ராவணனுடைய உடம்பு தரையின் கீழ் இறங்கிக் கஷ்டப்பட்டு; ஓங்கு நீ விடம் பிறந்த: வடவாமுகாக்கினியும் ஆலகால விஷமும் எழுந்த; கடலனை வெம்பினன்: கடலைப் போலத் துயர வெப்பத்தினுல் வதைந்து கொண்டிருந்தான்.]

நெடார்த் தடார் என்று தரையில் மோதும்படி விழுவதால் தரை பள்ளம் பட உடம்பு அதில் இறங்கினதாகத் தோற்றம் ஏற்படுகிறது!

# படித்துப் பாருங்கள்!

## Sivananda's Lectures

(All India Tour)

வடக்கே இமயமலைச் சாரலில் ஆசிரமத்தை அமைத்துக் கொண்டு சுவாமி சிவானந்தர் பாரத நாட்டுக்குப் பல்லாண்டுகளாகப் பாரமார்த்திகத் துறையில் அரும் தொண்டு செய்து வருகிறார். அத்தகைய மகான் ஒன்றரை ஆண்டுகளுக்கு முன் தமது ஆசிரமத்தை விட்டு, பாரத தேசம், இலங்கை முதலிய இரு நாடுகளிலும் விரிவாகச் சுற்றுப் பிரயாணம் செய்தார். ஆங்காங்கே பல்லாயிரக் கணக்கான பக்தர்கள் கூடி அடிகளைத் தரிசனம் செய்து மகிழ்ந்தனர்; ஈசுவரானுபவத்தில் தோய்ந்து வரும் அவருடைய அமுத மொழிகளைக் கேட்டு மெய் சிலிர்த்தனர். அப் பிரசங்கங்களை இப்போது புஸ்தகமாகப் படிக்கும்போதும் ஈசுவரனிடத்தில் தளரா உறுதியும் பக்தியும் ஏற்படுகின்றன. அந்தப் பிரசங்கங்களின் ஜீவ சக்தி படிப்போர் மனத்தை ஈசனின் சன்னிதியில் கொண்டு நிறுத்துகின்றது.

தொகுத்தவர்: ஸ்ரீ சுவாமி வேங்கடேசானந்தா.

கிடைக்குமிடம்: The Sivananda Publication League, Rishikesh, U. P. விலை: ரூ. 15

## விஞ்ஞானப் பெரியார்கள்

விஞ்ஞான வளர்ச்சிக்கு மேல்நாட்டு அறிஞர்கள் ஆற்றியிருக்கும் தொண்டு அளவிடற்கரியது. அவர்கள் தங்கள் வாழ்நாள் முழுவதும் விஞ்ஞான ஆராய்ச்சியில் ஈடுபட்டிருந்து உலகமே வியக்கும் ஆச்சரியமான உண்மைகளைக் கண்டு பிடித்து வெளியிட்டிருக்கிறார்கள். அத்தகைய விஞ்ஞான சாஸ்திர நிபுணர்கள் பத்துப் பேர்களுடைய சுவாரஸ்யமான வாழ்க்கைக் குறிப்புகள் இந்நூலில் கூறப்பட்டிருக்கின்றன. நம் பாரதநாட்டைச் சேர்ந்த ஸர் ஸி. வி. ராமன், ஸர் ஜகதீஷ் சந்திரபோஸ் என்னும் இரண்டு மாபெரும் விஞ்ஞான அறிஞர்களைப் பற்றிய வரலாறுகளும் சேர்த்து இந்நூலுக்கு ஒரு தனிப் பெருமையைத் தருகின்றன.

ஒவ்வொரு அறிஞரின் வாழ்க்கையிலும் ஏற்பட்ட துன்பங்களும், இடைஞ்சல்களும் எண்ணிறந்தன. அவர்கள் தோல்வி மனப்பான்மையை அறவே ஒழித்து, அந்தத் துன்பங்களை எதிர்த்துப் போராடி எப்படி உலகப் புகழ் பெற்றார்கள் என்பது அந்த அறிஞர்கள் ஆராய்ந்து அறிந்த விஞ்ஞான உண்மைகளைவிடப் பாராட்டப்பட வேண்டியவை. மனிதன் எப்படி உயர்கிறான் என்னும் கேள்விக்குச் சரியான விடை அளிக்கிறது இந்நூல். விலை: ரூ. 3—5—0.

## விஞ்ஞானம் எதற்கு?

வாழ்க்கைக்கு இன்றியமையாத விஞ்ஞான சாதனங்கள் மனித வாழ்வையே மாண்புறச் செய்யும் சக்தி வாய்ந்தவையாகும் என்பது இந்நூலில் நன்கு விளக்கப் பட்டிருக்கிறது. விஞ்ஞான உண்மைகளை அறிவதனால், மக்களிடையே சாதாரணமாகத் தொன்றுதொட்டு நிலவிவரும் மூடப் பழக்க வழக்கங்கள், மூட நம்பிக்கைகள் இவையெல்லாம் தகர்ந்து போகும்; எதையும் ஆராய்ந்து பார்த்து முடிவுக்கு வரும் திறன் ஏற்படும் என்பதை யெல்லாம் பெரிய பெரிய விஞ்ஞானிகளின் ஆராய்ச்சிகளிலிருந்தும், அவர்களின் கூற்றுகளிலிருந்தும் ஆசிரியர் தெளிவாக விளக்கியுள்ளார். விலை: ரூ. 1—12—0.

இரண்டு நூல்களையும் எழுதியவர்:— பெ. திருகூடசுந்தரம் எம். ஏ., பி. எல்.; பிரசுரம்: காந்தி நிலையம், தியாகராயநகர், சென்னை-17.

## பிறை

பட்டென்று ஆரம்பமாகிச் சட்டென்று முடிந்துவிடும் பத்துக் கதைகள் இப்புத்தகத்தில் அடங்கியிருக்கின்றன. "பிறை," "விலங்கு பூட்டிய கரம்" முதலிய கதைகள் படிப்பதற்கு அலுப்பில்லாமல் சுவாரஸ்யமாகச் செல்லுகின்றன. கதைக்கு வேண்டாத வர்ணனைகளோ வாக்கியங்களோ கற்பனைகளோ எதுவுமே இல்லை இந்த நூலில். அமரர் வ. ரா. அவர்களின் முன்னுரை இந்நூலுக்கு அழகு தருகிறது.

ஆசிரியர்:—புஷ்பத் துறை சுப்பிரமணியம்; பிரசுரம்: ஸ்டார் பிரசுரம், 79, சிங்காரத்தோப்பு திருச்சிராப்பள்ளி; விலை: ரூ. 1—0—0.

# சுறுசுறுப்பான குழந்தைகளுக்கு அதிகப்படி போஷாக்கு அவசியம்!




எப்பொழுதும் ஓடி ஆடும் குழந்தைகளின் சக்தி விரயமாவது வெகுவாகும். அதை ஈடு செய்ய அவர்களுக்கு அதிகப்படி போஷாக்கு அவசியம்.

அவர்கள் ருசிமிகுந்த ஓவல்டினை மிகவும் விரும்புகின்றனர். எளிதில் ஜீரணமாகக்கூடியது. அவர்களின் வளர்ச்சிக்கும் ஆரோக்கியத்திற்கும் பெரிதும் உதவுகிறது. ஓவல்டினில் சுத்தமான பசுவின் பால், பழுத்த பார்லிமால்ட், கொக்கோ, பாஸ்படைட்கள் பி & டி விடமின்கள் சேர்க்கப்பட்டுள்ளன. அதிலிருக்கும் போஷாக்கு மற்றும் விடமின் சத்துக்கள் இன்றியமையாதவை. ஓவல்டினை விடச் சிறந்தது வேறு கிடையாது

ஓவல்டின் சிறியோர் பெரியோர்களுக்கும் நல்லது. குடும்பத்திற்கேற்ற சிறந்த உணவு பானம். டாக்டர்கள் எங்கும் சிபாரிசு செய்கின்றனர். சோர்வினைத் தள்ளிவிடுங்கள்.

விநியோகஸ்தர்கள்: கிரஹம்ஸ் டிரேடிங் கம்பெனி (இந்தியா) லிட்.




## ஓவல்டின்

குழந்தைகள் விரும்பும் பானம்!

பற்களை சுத்தம் செய்வது பாதி வேலை தான்...

தினமும் ஈறுகளைப்பாதுகாப்பது அந்த வேலையை பூர்த்தி செய்கிறது!

உங்கள் பற்கள் ஒழுங்காகவும் ஆரோக்கியத்துடனும் இருந்தாலும்கூட ஈறுகள் பலமற்றோ அல்லது நோயுற்றோ போனால் அவைகளை வெகு எளிதில் இழக்க நேரிடும். ஆகவே இந்த ஆபத்துக்குள்ளாகாதீர்கள்! தினமும் இருமுறை கிப்ஸ் எஸ். ஆர். டூத்பேஸ்ட் உபயோகியுங்கள். பல் வைத்தியர்கள் ஈறுகளை சிகிச்சை செய்ய உபயோகிக்கும் ஸோடியம் ரிஸினோலியேட் இதில் அடங்கியுள்ளது. மேலும் இது பற்களை பளிச் சென்று வெண்மையாக சுத்தம் செய்கிறது.

கிப்ஸ்
ரிஜிஸ்டர்ட்
**எஸ்.ஆர்.** டூத்பேஸ்ட்

பற்களை பளிச்சென்று வெண்மையாகவும் ஈறுகளை ஆரோக்கியமாகவும் வைத்திருப்பதற்கென்றே பிரத்தியேகமாக தயாரிக்கப்பட்டுள்ளது

S.R. TOOTHPASTE

GSR. 77-50-65 TM

# வழிப் பழி!

ஜடாதரன்

"பா லு......பா லு......"

அதிக வயதாய் விட்டதெனினும், 'கணீ'ரென்று வெண்கலமாய் ஒலித்த குரல் எதிர் வீட்டுக் கிழவரின் குரலென்று புரிந்து கொள்ள எனக்கு வெகுநேரம் பிடிக்கவில்லை. காரியமில்லாமல், காலை வேளையில் என்னைத் தேடிவரக் காரணமில்லையே என்ற நினைப்பில் வீட்டினுள்ளிருந்து வெளியே வந்தேன்.

"ஆபீசிற்குக் கிளம்பி விட்டாயாப்பா?"

"இன்னும் இல்லை தாத்தா: இப்போ தான் சாப்பிட்டு முடித்தேன். பத்து நிமிஷங்களில் கிளம்பிவிடுவேன். டவுனிலேயிருந்து உங்களுக்கு ஏதாவது வாங்கிக் கொண்டு வரணுமா?"

"எனக்கு ஒன்றும் வேண்டாம். உன்னிடம் தான் ஒரு வார்த்தை சொல்லவேண்டும் என்று வந்தேன். வித்தியாசமாக நினைத்துக் கொள்ள மாட்டாயே?"

"நினைத்துக் கொள்ள மாட்டேன்; சொல்லுங்கோ."

"ஒரு நாளைப்போல தினம் ராத்திரி பத்து மணிக்குத்தானே நீ வீடு திரும்புகிறாய்? என்னதான் ஜோலியிருந்தாலும் ஆறுமணிக்கெல்லாம் திரும்பி விடப்பா! காலங்கெட்டுக் கிடக்கிற நிலையிலே நாம் எதைத்தான் எதிர் பார்க்கக்கூடாது? இந்தக் குட்டி மங்களம் வேறு விசாரப்பட்டுக் கொண்டு கிடக்கிறாள். வயசானவன் நான். நான் சொன்னால் கேட்பாய் என்றுதான் நீ கிளம்புகிறதற்கு முன்னால் ஓடி வந்தேன்."

கிழவரின் அன்புக் கோரிக்கை என் உள்ளத்தைத் தொடத்தான் செய்தது. என்றுமில்லாத வழக்கமாய் அவர் சொன்னதும் காரணமில்லாமல் போகாது என்றும் எனக்குத் தோன்றியது.

"சமாசாரம் தெரியுமோ இல்லையோ? மூந்தாநாள் என்ஜினியர் வீட்டுத் திடல் கிட்டே நம் கோவிந்தய்யர் பிள்ளையை இரண்டு மூன்று பேராக வளைத்துக்கொண்டு இருக்கிற பணத்தையெல்லாம் பிடுங்கிக் கொண்டு போய் விட்டார்களாம். நல்ல வேளையாக ஆசாமிக்குக் காயம், அடி, ஒன்றும் இல்லை. எல்லாம் பகவான்தான் காப்பாற்றினார். இத்தனைக்கும் ராத்திரி ஒன்பது மணி தான், இது நடக்கிறபோது. நீ இனிமேல் அகாலத்திலே வராதே, அப்பா!"

யார் செய்த புண்ணியமோ, கிழவர் சொன்ன போன படலத்தைச் சுருக்கமாகவே முடித்து விட்டார். அவர் சென்றதும் என் சிந்தனை பிடிப்பில்லாமல் எதிலெல்லாமோ நழுவிச் சென்று கொண்டிருந்தது. நான் ஆபீஸுக்குக் கிளம்ப ஆயத்தமானபொழுது மங்களம் குறும்பாகச் சிரித்துக் கொண்டே வந்து, "தாத்தா சொன்னதை நினைவு வைத்துக் கொள்ளுங்கள்!" என்றாள்.

நான்கு மாதங்களுக்கு முன்புதான் நான் பெரு நகருக்குக் குடியேறினேன். நகரத்தில் உள்ள இட நெருக்கடியும், தண்ணீர்ப் பஞ்சமும் சேர்ந்து என்னை நகரச் சந்தடியிலிருந்து விலகிப் பதினான்கு மைலுக்கு அப்பாலுள்ள இந்தப் பிரதேசத்திற்குத் துரத்தி விட்டன.

குரோம்பேட்டை ஸ்டேஷனில் இறங்கிப் பதினைந்து நிமிஷங்கள் நடந்த பிறகு காலனிக்குள் நுழையும் பாதையில் அடித்துப் போட்டால் கேட்பதற்கு ஆளில்லைதான்!

கிழவரின் சொற்கள் என் உள்ளத்தில் எதிரொலித்துக் கொண்டிருந்தன. ஆகையால் ரயிலில் ஏறி உட்கார்ந்ததும் என் சிந்தனை இரண்டு வருஷங்களுக்கு முந்திய சம்பவம் ஒன்றில் போய் லயித்தது.

---



மனைவி:- இந்தாருங்கள், இன்றைக்கு டிபன் அடை பண்ணியிருக்கிறேன்! பாலுவும் டிபன் பண்ணியாகி விட்டது. நீங்கள்தான் பாக்கி!

கணவன்:- சரி, நான் எடுத்துக்கொள்கிறேன். பாலு எங்கே? பாலு, பாலு!

மனைவி:- அவனை ஏன் கூப்பிடுகிறீர்கள்? அவன் நாலு அடை தின்று விட்டான். அவனுக்கு ஒன்றும் கொடுக்க வேண்டாம்!

கணவன்:- அவனுக்குக் கொடுக்கிறதற்குக் கூப்பிடவில்லை. அவன் அதை எப்படித் தின்றான் என்று கேட்கத்தான் அவனைக் கூப்பிடுகிறேன்!

அப்போது நான் சேலம் தபாலாபீஸில் வேலையாக இருந்தேன்.

என் ஜாகை சற்று ஊருக்கு ஒதுப்புறமான பிரதேசத்தில் இருந்தது. என் மனைவி பிரசவத்திற்காகப் பிறந்தகம் போயிருந்ததால் ஹோட்டல் ஒன்றில் சாப்பிட்டுக் கொண்டு, அரண்மனையாய்க் கிடந்த வீட்டில் ஏகாங்கியாக வாழ்ந்து வந்தேன்.

ஒரு நாள் சாப்பிட்டு விட்டு முற்றத்தில் கட்டிலை இழுத்துப் போட்டுக் கொண்டு நட்சத்திரக் கூட்டங்கள் நிறைந்த வான வெளியை ரஸித்துக் கொண்டிருக்கையில், ஊரோசை அடங்கி விட்ட நிசப்தத்தில் பல குரல்களின் பயங்கரமான சப்தத்தைக் கேட்டுத் திகைத்து எழுந்திருந்தேன்.

'டபடப' என்று வாசற் கதவு தட்டும் சப்தம் கேட்டது. 'யார் அது?' என்று அதட்டிக் கொண்டே கதவைத் திறந்தவனுக்கு வாயடைத்துப் போய், எதிரே நின்ற ஆஜானுபாகுவான கரிய மனித உருவத்தைக் கண்டு மனம் பேதலித்தது.

"சாமீ! நல்லா இருப்பீங்க! தயவு செய்து ஒளிந்து கொள்ளக் கொஞ்சம் இடம் கொடுங்கள். பாவிப் பயலைக் காட்டிக் கொடுத்து விடாதீங்க. சாமி! உங்கள் பிள்ளை குட்டி நல்லா இருக்கணும்!"

என்னை அவன் வாழ்த்துகையில், அடைக்கலத்திற்காக ஏங்கி ஓலமிட்ட அவன் குரலின் தன்மைக்கு என் மனம் இளகியது. ஆகிருதியின் பயங்கரத்திற்குத் தக்கவாறு இல்லாமல், அவன் குரலில் தொனித்த விநயம் என்னை ஆட்கொண்டு விட்டது போலும்! வேறு ஒன்றும் பேசாது அவனை அறை ஒன்றில் தள்ளித் தாளிட்டேன்.

பிற்பாடு நடந்ததை உணர்ந்த பிறகுதான் நான் செய்த காரியம் நியாயம்தானா என்று மனத்தில் ஓயாது உளைச்சல் ஏற்பட்டது. ஏனெனில், எங்கோ ஒரு வீட்டில் கொள்ளை நடந்திருக்கிறது. கையும் களவுமாய் ஆசாமியைப் பிடித்து விட்ட வீட்டுச் சொந்தக்காரரின் மண்டையில் அடித்து விட்டு ஓடி வந்த திருடன்தான், பத்திரமாக என்னிடம் அடைக்கலம் புகுந்திருந்தான்! இரவு முழுவதும் ஜனங்கள் அவனைத் தேடிக் கொண்டு கிடந்தனர். சிக்கி விட்டவனைத் தவற விட்டதில் அவர்களுக்கு ஒரே ஏமாற்றம். எந்த மனநிலையில் இம்மாதிரி மனமறிந்து குற்றவாளியை மறைத்து வைத்த குற்றத்தைச் செய்ய முற்பட்டேன் என்று சொல்ல எனக்குத் தெரியவில்லை. ஆயினும் என் செய்கைக்காக அவன் உணர்ச்சிப் பெருக்கில் தன் நன்றிக் கடனைத் தீர்த்துக்கொள்ள விசும்பி விசும்பி அழுதான். சோகத்திலேயே சுழன்று கொண்டிருக்கும் எண்ணற்ற மனிதர்களின் கதையைப் போல அவன் வாழ்வும் ஒரு சோகக் கதைதான்.

அவன் துயரக் கதையைக் கேட்ட பின் அவனுக்கு அபயம் அளித்தது எனக்கு அவ்வளவு பெரிய தவறாகப் படவில்லை.



"ஏன் அப்பா பட்டணத்திற்குப் போய் ஏதாவது ஒரு வேலை தேடிப் பிழைத்துக் கொள்ளேன்!" என்று உபதேசம் செய்து அவனைத் தப்புவித்தேன். மனிதத் தன்மைக்கு முன்பு எந்த முரட்டுத்தனமும் ஒன்றும் செய்து விட முடியாது என்ற உண்மையை நானே கண்டு பிடித்து விட்ட ஒரு பிரமையைத்தான் அந்த நிகழ்ச்சி எனக்கு அளித்தது! நாளடைவில் அபயம் அளித்த அந்தச் சம்பவத்தின் நினைவே என்னுள் தேயத் தொடங்கியது!

★

எழும்பூரில் இறங்கிக் காரியாலயம் வரும் வரை என் உள்ளத்தை அந்தப் பழைய கதை ஸ்வீகரித்துக் கொண்டு பிரயாணத்தின் அலுப்பை ஒருவாறு மறக்க அடித்தது. மாலை காரியாலயம் விட்டதும் சீக்கிரம் வீட்டிற்குப் போக வேண்டும் என்ற நினைப்பு இல்லாமல் போகவில்லை. மனைவியின் பரிதாபமான அழுத முகமும், எதிர்வீட்டுக் கிழவரின் அன்புக் கட்டளையும் என் எண்ணத்தைச் செயலில் காட்ட வலியுறுத்தின; ஆயினும் என் சுபாவம் போகவில்லை. வழியில் சந்தித்த நண்பன் ஒருவனோடு கூடச் சினிமாக் காட்சி ஒன்றைப் பார்த்து விட்டு இரவு பத்தரை மணிக்குத்தான் தினம்போல் எழும்பூரில் வண்டியைப் பிடித்தேன்.



"குரோம்பேட்டை, குரோம்பேட்டை!" என்று தூக்கக் கலக்கத்தில் போர்ட்டர் இறங்குபவர்களை அறைகூவி யழைத்தான். நான் மாத்திரம்தான் இறங்கினேன்.

தனியாக அகாலத்தில் நடக்க ஆரம்பிக்கையில் கிழவர் சொன்னது நினைவு வரவே மனம் சமீபத்தில் பத்திரிகைகளில் வெளி வந்த வழிப்பறி கேஸ்களை யெல்லாம் கிளறி என்னைப் பயமுறுத்திற்று. கால்கள் துரிதமாக முன்னேற முயன்றாலும், நடையில் தடுமாற்றம் ஏற்பட்டது. என்னை ஒட்டிய வெள்ளைப் பாலம் ஒன்று யாரோ உட்கார்ந்திருப்பது போன்ற பிரமையை உண்டு பண்ணி என்னை வெல வெலக்கச் செய்தது.

இன்னும் ஒரு பர்லாங்கு நடந்தால் 'லெவல் கிராஸிங்' கேட்டை அடைந்துவிடலாம். அதன் பிறகு கொஞ்சம் பயம் குறைவு. ஆனால் என் வரையில் ஒவ்வொரு விநாடியும் ஒரு யுகமாகத் தோன்றியது. இனம் புரியாத பயத்தில் இருதயம், 'பட் பட்' என்று வேகமாக அடித்துக் கொண்டது.

எங்கோ சரளைக் கற்கள் சரிந்து விழும் ஓசை பலமாகக் கேட்டது. பக்கவாட்டிலிருந்து யாரோ ஓடிவருவதும் தெரிந்தது. உடல் சிலிர்த்தது. என்னவோ கதறவேண்டும் என்று நினைத்த என் நாக்கு மேலண்ணத்தில் ஒட்டிக் கொண்டது.

இரண்டு முரட்டுக் கரங்கள் என் குரல்வளையைப் பிடித்து நெரித்தன. பயத்தினால் கண்கள் தாமாகவே மூடிக் கொண்டு வெளியே திறந்து பார்க்கத் தயங்கின. மற்றொரு ஆசாமியின் கரங்கள் கச்சிதமாக என் உடைமைப் பொருள்களை வழிப்பறி செய்தன. என் மணி பர்ஸ், மாமனார் வாங்கிப் போட்ட கைக் கடிகாரம், மோதிரம், அழகிய விலையுயர்ந்த பேனா இவைகள் யாவும் என்னை விட்டுப் பிரிக்கப்பட்டன.

"எல்லாத்தையும் எடுத்துக் கிட்டியா, அண்ணே!" என்ற குரல் ஏதாவது விட்டுப் போய்விட்டால் என்ன செய்வது என்கிற நல்ல எண்ணத்தில் கூட்டாளியை விசாரித்துத் தெரிந்து கொண்டது!

"மிஸ்டர், சத்தம் கித்தம் போட்டியோ, தொலைச்சுடுவேன்" என்று இன்னொருவன் என் உயிருக்கு எச்சரிக்கை விடுத்தான். கொள்ளை யடிக்கப்பட்டவனை சரியாகத் தெரிந்து கொள்ள வேண்டியோ, என்னவோ, ஒரு ஆசாமி தன் கையிலிருந்த டார்ச்சின் உதவியால் என் முகத்தில் வெளிச்சம் பாய்ச்சினான். திடீரென்று பாய்ந்த வெளிச்சத்தில் கண்கள் கூசித் திறந்தன. 'டக்' கென்று டார்ச்சும் அவிந்தது. என்னைப் பலமாகப் பிடித்திருந்த கரங்கள் பிடியைத் தளர்த்தின. ஏதோ இனம் புரியாத குழப்பம். ஒன்றுமே சரியாகப் பிடிபடவில்லை. சற்றுத் தள்ளி அந்த ஆட்கள் சில கணங்கள் ஏதோ தர்க்கித்தனர். மங்கிய நிலவொளியில் ஆட்களை நிதானம் கண்டு கொள்ள முயன்றேன். பயமடைந்த மனத்தில் தெளிவு உண்டாகவில்லை. அதற்குள் ஆட்கள் ஓடிவிட்டனர்.

சப்தத்தைக் கேட்டு 'லெவல் கிராஸிங்' இரவு காவலாளிகளில் இரண்டு பேர் கையில் லாந்தருடன் ஓடிவந்து "ஏன் ஸார்! உரக்க ஒரு குரல் கொடுக்கக் கூடாது? சும்மா 'கம்'னு இருந்திட்டீங்களே!" என்றார்கள்.

லாந்தருடன் இருந்த ஆளின் காலில் ஏதோ தட்டுப்படவே, விளக்கொளியைப் பெரிது பண்ணிக் கீழே குனிந்தான். வழிப்பறிக் காரர்கள் நின்று பேசிக் கொண்டிருந்த இடத்தில் கூர்ந்து நானும் கவனித்தேன். என் கண்களை என்னாலேயே நம்ப முடியவில்லை! கொள்ளை போன என் சாமான்களெல்லாம் அங்கே சிதறிக் கிடந்தன! கொள்ளை யடித்தவர்கள் ஒன்றைக்கூட எடுத்துப் போக வில்லை! கூட இருந்த ஆட்களெல்லாம் கூட வியப்பெய்தினர். சாமான்களைச் சேகரம் செய்து கொண்டு துணைக் கோஷ்டி ஒன்றுடன் வீடு வந்து சேர்ந்தேன்!

மறுநாள் 'காலனி' முழுவதும் அமளிப் பட்டது. என்னைப் பார்த்து விசாரிக்க வந்தவர்கள் வற்புறுத்தவே, நான் போலீசுக்கு ஒரு 'ரிப்போர்ட்' எழுதி அனுப்பினேன்.

நான் ரிப்போர்ட்டுச் செய்த ஒரு வாரத்துக்கெல்லாம், பல்லாவரம் போலீஸ் ஸ்டேஷனிலிருந்து என்னை அழைக்க ஆள் வந்திருக்



மானேஜர் :— குடத்தைத் தூக்கிக் கொண்டு வந்திருக்கிறீர்களே? இது என்ன! ஆபீசா, வீடா?

குமாஸ்தா :—என்ன ஸார், செய்கிறது? வீட்டுக் குழாயிலே சொட்டுக் கூட ஜலம் வரவில்லை. ஆபீசுக் குழாயிலே சுமாராக வருகிறது. அதனால் கொஞ்சம் பிடித்துக் கொண்டு போகலாம் என்று வந்தேன்.



ஜோஸ்யர்:—சாமியாரே! அப்புறம் என்ன சந்தேகம்?

சாமியார்:—என்னங்க இந்தக் கட்டைக்கு வேணும்? வீடு, வாசல், நிலம் எல்லாவற்றையும் துறந்து விட்டு வந்திருக்கிறது. ஆயுள் பலம் மட்டும் எப்படி இருக்கிறது என்று பார்த்துச் சொல்லுங்க, அது போதும்!

தான். இரண்டு பேரைச் சந்தேகத்தின் பேரில் கைது செய்திருப்பதாயும் அடையாளம் கண்டு சொல்வதற்கு வந்து போகும்படியும் இன்ஸ்பெக்டர் பணித்திருந்தார். நான் மிடுக்காகவே சென்றேன்.

பரிதாபமாகக் காட்சியளித்த இரண்டு முரட்டு ஆசாமிகளை என் முன் கொண்டு வந்து நிறுத்தினான் ஒரு ஜவான். ஒரு கணம் அந்த இரண்டு பேரையும் நிதானித்துப் பார்த்தேன். ஒருவனிடம் என் பார்வை தீவிரமாக லயித்தது!

காரிருளில் மின்னலைப் போல, மனதைக் கவ்வியிருந்த சந்தேகம் நீங்கியது! என் உடைமைப் பொருள்களெல்லாம் என்னிடமே பத்திரமாக இருக்கும்படி, வழிப்பறிக்காரர்கள் செய்துவிட்டுப் போனதின் காரணமும் எனக்கு விளங்கிவிட்டது. அந்தப் பழைய சேலம் சம்பவம் மீண்டும் என் நினைவுக்கு வந்தது.

நீதியையும், தர்மத்தையும் நிலைநிறுத்த, குற்றவாளிகளுக்குத் தண்டனை அவசியம் தான் என்பதை என் மனத்தின் ஒரு குரல் என்னுள்ளேயே விவாதிக்கத் தொடங்கியது. என்னை வழிப்பறி அடித்தவன், என்னால் 'பட்டணம் போய்ப் பிழைத்துக் கொள்' என்று உபதேசம் செய்யப்பட்டவன் தான். என் உபதேசம் பாதி நிறைவேறியிருந்தது. பட்டணத்திற்கு வந்தவன் என் உபதேசப்படி நடக்கவில்லை யென்று எப்படிச் சொல்வது? இன்ஸ்பெக்டர் பதிலுக்குக் காத்திருந்தார். தீர்மானமாக என் சாட்சிக் குரல் ஒலித்தது.

"இவர்கள் இல்லை, ஸார்; நிச்சயமாக இல்லை. என்னுடைய மனுவிற்காக இவர்களைக் கைது செய்யத் தேவை இல்லை. என்னை வழிமறித்தவர்களின் ஆகிருதியே வேறு ஸார்!" என்றேன்.

இன்ஸ்பெக்டரின் முகம் சாம்பியது. அதற்குள் அந்தச் சேலம் ஆசாமியே, "ஸார்! நான்தான் அன்று உங்களை வழிப்பறி செய்ய வந்தது. விளக்கு ஒளியில் உங்கள் முகத்தைப் பார்த்ததும் சேலத்தில் என்னை ஒரு தடவை காப்பாற்றியது தாங்கள்தான் என்பதைத் தெரிந்து கொண்டேன். ஆகவே தான் தங்கள் பொருளை அங்கேயே போட்டு விட்டேன். திருடனை என்னை நீங்கள் நல்ல மனத்தின் காரணமாக இரண்டாவது தடவையும் காப்பாற்ற முயல்கிறீர்கள். தங்கள் சொல்லைக் காற்றில் பறக்க விட்டு விட்ட நான் மகா பாவி. தங்கள் சொல்லைத் தட்டி மறுபடியும் திருட்டுத் தொழிலை மேற்கொண்ட எனக்குத் தகுந்த தண்டனை கிடைக்க வேண்டியதுதான்!" என்று சொல்லி என் கால்களில் விழுந்து விட்டான்.

அப்பொழுதும் என் உள்ளம் அவனை மன்னிக்கத்தான் முற்பட்டது. அதற்காக நீதியையும் நேர்மையையும் நிலைநாட்டுவதற்காக ஏற்பட்டுள்ள சட்டம் திருடனுக்கேற்ற தண்டனையைக் கொடுக்காமல் இருந்து விடுமா, என்ன?

## பியர்ஸ் டால்கம் பௌடர் உபயோகியுங்கள்



முகத்திற்கு — இளம் சிவப்பு நிறம். மிருதுவானது. மிக நேர்த்தியான தூள்



உடலுக்கு — வியர்வையை உறிஞ்சுகிறது. ஆறுதலளிக்கிறது. புத்துணர்ச்சியைத்தருகிறது



குழந்தைக்கு — போரிக் பௌடர் சேர்ந்தது. சருமத்தில் புண், எரிச்சல் ஏற்படாமல் தடுக்கிறது

**பியர்ஸ்** டால்கம் பௌடர்

ஒன்றில் 3 பௌடர்கள் சேர்ந்தது

மகிழ்ச்சிதரும் நறுமணம் கொண்டது



**பியர்ஸ்** அழகுதரும் அசல் கிளிசரின் சேர்ந்த சோப்




ஏ. அண்ட் எப். பியர்ஸ் லிட்., லண்டனுக்காக இந்தியாவில் தயாரித்தது PTP. 5-50 TM

# யார் பைத்தியம்?

வித்துவான் வேதநாயகத்துக்கு அன்று வீட்டில் பொழுது போகவில்லை. எங்கேயாவது போய்ச் சுற்றி விட்டு வரலாம் என்று எண்ணிப் புறப்பட்டார். வழியில் பைத்தியக்கார ஆஸ்பத்திரி இருந்தது. அதன் விசாலமான தோட்டத்தில் சிலர் உட்கார்ந்திருந்தனர். வேதநாயகத்துக்கு என்ன தோன்றிற்றோ, சட்டென்று அந்தத் தோட்டத்துக்குள் நுழைந்தார்.

உட்கார்ந்திருக்கும் பைத்தியக்காரர்களின் செய்கைகளைப் பார்த்துச் சிந்தித்தவாறே அவர் தோட்டத்தைச் சுற்றி வந்தார். ஒரு பெஞ்சியில் அழகான வாலிபன் ஒருவன் உட்கார்ந்திருந்தான்.

வேதநாயகத்துக்கு அவனைப் பார்த்ததும் தம்மை அறியாமலே அவன் மீது இரக்கம் ஏற்பட்டது. ஆகவே, அவன் அருகே சென்று "என் அப்பா! இங்கே நீ எங்கே வந்தாய்?" என்று ஆதரவுடன் கேட்டார்.

அவன் அவரை ஆச்சர்யத்துடன் ஒரு முறை ஏற இறங்கப் பார்த்தான். பிறகு "நீங்கள் கேட்கும் கேள்வி மிகவும் விசித்திரமாக அல்லவா இருக்கிறது! இருந்தாலும் நீங்கள் கேள்வி கேட்டுவிட்டீர்கள். அதற்குப் பதில் சொல்ல வேண்டியது என் கடமை. ஆகவே சொல்கிறேன், கேளுங்கள். என் பெரியப்பாவுக்கு ஜில்லா கலெக்டர் வேலை. எனவே என் அப்பா என்னை என் பெரியப்பாவைப் போலப் பெரிய ஜில்லாக் கலெக்டர் ஆக்கி விடவேண்டும் என்று நினைக்கிறார். என் அம்மாவோ, நான் அப்பாவுக்குப் பின்னையாக—அதாவது பெரிய வக்கீலாக இருக்க வேண்டும் என்று விரும்புகிறாள். என் அக்காவோ, நான் என் அத்திம்பேரைவிட ஒரு படியாவது மேலாக இருக்க வேண்டும் என்று விரும்புகிறாள். அவள் கணவர்—அதாவது என் அத்திம்பேர் — ஆகாய விமானம் ஓட்டுபவர். நானும் அப்படி ஆகிவிட்டால் அவரை விட ஒரு படி மேலே ஓட்டலாம் அல்லவா? என் அண்ணா பெரிய ஆட்டக்காரர். அவருக்குத் தன் தம்பி தன்னைவிடப் பெரிய ஆட்டக்காரனாக ஆகி விடவேண்டும் என்று ஆசை. என் ஆசிரியன்மார்கள் இருக்கிறார்களே, அவர்கள் தங்களைப் போலவே பெரிய புரொபஸராக என்னையும் ஆக்கிவிட வேண்டும் என்று விரும்புகிறார்கள். சரித்திர ஆசிரியர் என்னைச் சரித்திர ஆராய்ச்சியாளனாக ஆக்கிவிட விரும்புகிறார். கணித ஆசிரியரோ என்னை ராமானுஜத்தைப் போன்ற கணித மேதை ஆக்கி விடவேண்டும் என்று நினைக்கிறார். அவர் அவர்கள் தங்கள் தங்கள் திறனை என்னிடம் உண்டு பண்ணி விடவேண்டும் என்று விரும்புகிறார்களே ஒழிய எனக்கென்று தனி வழி ஏற்படுத்திக் கொள்ள இடம் கொடுக்க யாருமே விரும்பவில்லை. இந்தக் குழப்பத்தில் என் மன நிலையே குழம்பி விடும் போலாகி விட்டது. நல்ல வேளையாக, இங்கு எனக்கு அடைக்கலம் கிடைத்தது. அவர்களிடம் இருந்து அவஸ்தைப்படுவதைக் காட்டிலும் இங்கே எவ்வளவோ சௌகரியமாயிருக்கிறது. முக்கியமாக எனக்கென்று ஒரு தனி வழியை வகுத்துக் கொள்ள முடிந்து விட்டதல்லவா?" என்றான் பெருமையாக.

வேதநாயகம் அவன் சொன்னதைப் புரிந்து கொள்ள முயன்று கொண்டிருந்தார். அதற்குள்ளாக அவன் வேதநாயகத்தைப் பார்த்து, "ஆமாம், நீங்கள் இங்கே எதற்காக வந்தீர்கள்? உங்கள் கல்வியும் கூரிய புத்தியும் உங்களை இங்கே வரும்படி தூண்டி விட்டனவா, என்ன?" என்று கேட்டான்.

"இல்லை. சும்மா பார்த்துவிட்டுப் போகலாம் என்று வந்தேன். வேறு ஒன்றும் இல்லை!" என்றார் வேதநாயகம்.

"அப்படியா? நீங்கள் இந்தக் காம்பவுண்டுக்கு வெளியே இருக்கும் பெரிய பைத்தியக்கார ஆஸ்பத்திரியிலிருந்து வந்திருக்கிறீர்கள் என்று சொல்லுங்கள்!" என்று சொல்லி விட்டு அந்த வாலிபன் மௌனமானான்.

வேதநாயகத்துக்கு அவன் சொல்வது சரியாகவே பட்டது. "நீ சொல்வது உண்மைதான் அப்பா!" என்று சொல்லி விட்டு வீட்டை நோக்கி நடந்தார்.

— ரா. வீ.




பிரஞ்சுக் கதை: **பியர் பாஸன்**

மொழிபெயர்ப்பு: **வாஞ்சி**

ரயில் வண்டியில் ஏறுவதற்காகக் கைதிகள் எல்லோரும் வரிசையாக நிறுத்தப்பட்டிருந்தனர். அவர்களால் யாதொரு ஆபத்தும் நேராமல் தடுப்பதற்காகக் காவலர்கள் அந்தத் துர்ப்பாக்கியசாலிகளைச் சவுக்குகளால் அடித்த வண்ணமாக இருந்தார்கள். கைதிகள் யாவரும் உலகம் தங்களைப் பார்த்து ஏளனம் செய்யக் கூடாது என்பதற்காகத் தலைகுனிந்து கொண்டிருந்தனர்.

ஆனால், அவர்களில் ஒருவனுடைய முகத்தில் மாத்திரம் அப்போது புன்முறுவல் தவழ்ந்தது !

உஷ்ணமோ தாங்க முடியவில்லை. தேகத்தில் சவுக்கடி விழுந்த வண்ணமாக இருக்கிறது. மிருகங்களைக் காட்டிலும் மோசமாக ஐந்து நாட்கள் வரையில் எல்லாப் புறமும் மூடப்பட்ட ரயில் வண்டியில் பிரயாணம் செய்ய வேண்டும். மேற்படி பிரயாணத்தைப் பற்றி நினைப்பவர் எவருக்கும் குலை நடுங்காமல் இருக்க முடியாது.

அத்தகைய கொடுந் தண்டனைக்கு உட்பட்டுள்ள ஒருவன் முகத்தில் புன்முறுவலைக் காண்பதென்றால், அது ஆச்சரியமான விஷயம் அல்லவா !

அவன் முகத்தில் தென்படும் புன்முறுவல் உண்மைதானா அல்லது தன் மனப் பிரமையா என்பது வார்னெட்டுக்குச் சந்தேகமாக இருந்தது. மறுபடியும் அவனை உற்றுப் பார்த்தான். மனப் பிரமை இல்லை, அவன் மெதுவாகச் சிரிப்பது உண்மைதான் !

வார்னெட்டும் பதிலுக்காக அவனைப் பார்த்துச் சிரித்தான். அதிலிருந்து அடிக்கடி அவ்விருவரும் ஒருவரை ஒருவர் பார்த்துச் சிரித்தனர்.

காவலர்களின் மிருகத்தனமான கூக்குரல்கள் கைதிகளின் மண்டையில் அடிப்பது போல் இருந்தன. அவர்களை யெல்லாம் காவலர்கள் மாட்டு மந்தையைப் போல் ரயில் வண்டிக்குள் விரட்டினார்கள் ; வெறி பிடித்தவர்களைப் போல துப்பாக்கியின் அடிக் கட்டைகளால் கைதிகளைச் சிறிதும் இரக்கமின்றி அடித்தார்கள்.

அதனால், வண்டிக்குள் சென்ற பலர் இடறி விழுந்தனர். மற்றவர்கள் அவர்களை மிதித்துச் செல்லுவதைத் தவிர வேறு வழியில்லாததால் அவர்கள் நசுக்குண்டு இறந்தனர்.

வார்னெட் தைரியத்தை இழக்காமல் தனக்கு முன் சென்றவர்களைத் தள்ளிக் கொண்டு வண்டியில் ஏறினான். அவன் வேறு என்ன செய்வான் ! அவனுக்குப் பின் வந்தவர்கள் அவனைத் தள்ளினர். சவுக்கடி அவர்களை அப்படி உந்தித் தள்ளியது. மேற்படி கோரக் காட்சியைப் பார்த்தபோது மனித சரீரமாகிற உயிரற்ற அங்கள் ஒன்றையொன்று மோதிக் கொண்டு செல்வது போல் தோன்றியது.

எல்லோரும் வண்டியில் ஏறியதும் வண்டி மூடப்பட்டது. புளியைப் போல் கைதிகள் அந்த வண்டிக்குள் அடைக்கப்பட்டார்கள்.

அப்போது கூட வார்னெட்டும் மற்றவனும் ஒருவரை யொருவர் பார்த்துச் சிரித்தனர். அத்தனை பேர்களில் அவன் ஒருவனாவது தன்னைப் போல் சுய நம்பிக்கை உள்ளவனாக இருக்கிறானே என்று வார்னெட் திருப்தியடைந்தான்.

வண்டிக்குள் நூற்றைம்பது பேர்கள் அடைக்கப்பட்டிருந்ததால் சிறிதுகூட இடைவெளி யின்றி எல்லோரும் உட்கார்ந்து கொண்டிருந்தனர். சரியாக உட்கார முடியாதவர்கள் சாய்ந்து கொண்டிருந்தார்கள். அவர்களில் ஒருவருக்காவது பிறருக்கு வேதனையைக் கொடுக்காமல் தன் தேகத்தை அசைக்க முடியவில்லை. ஒருவர் மூச்சு மற்றொருவர் மீது படாமல் இருப்பது அசாத்திய மாகியது. அதனால் வண்டி முழுதும் உஷ்ணக் காற்று சூழ்ந்து

அகில உலகச் சிறு கதைப் போட்டியில் முதல் பரிசு பெற்ற நாலு கதைகளில் "ஐந்தாம் நாள்" என்ற இந்தக் கதை மூன்றாவதாகும். இதை எழுதிய பியர் பாஸன் பிரஞ்சு தேசத்தைச் சேர்ந்தவர். இவர் கவிதைகள் எழுதுவதில் நிபுணர். அவற்றைத் தவிர பல சிறு கதைகளும் நாடகங்களும் எழுதியுள்ளார். சென்ற மகா யுத்தத்தில் கலந்து கொண்ட இவரைப் பகைவர்கள் சிறைப் படுத்தினர் என்றாலும், பிறகு இவர் அவர்களிடமிருந்து தப்பியோடி விட்டார்.

கொண்டது. மனித சரீரங்களாகிற அசையும் எரிமலை உஷ்ணத்தைக் கக்குவதுபோல் இருந்தது வண்டிக்குள் தென்பட்ட காட்சி!

ரயில் வண்டி படீரென்று மூடப்பட்டு முத்திரையும் வைக்கப்பட்டது. வெளியே காவலர்களின் கூக்குரல்கள் ஏதோ வேறு உலகத்திலிருந்து வரும் குரல்களைப்போல் வண்டிக்குள் இருந்த கைதிகளுக்குத் தோன்றின.

வார்னெட் தன் நண்பனைப் பார்த்தான். இருவரும் மறுபடியும் மெதுவாகச் சிரித்தனர். அதன் பலனாகச் சில மணி நேரத்தில் இருவரும் நெருங்கிய நண்பர்கள் ஆயினர்

வார்னெட்டின் முகத்தில் இருந்ததுபோல் அவனுடைய தோழன் முகத்திலும் பழைய காயத்தின் வடு இருந்தது. இருவருடைய முகங்களும் மற்றவர்களைப்போலவே அவ்வமயம் பொலிவிழந்து அழுக்கடைந்து கிடந்தன.

ரயில் வண்டி ஒரு தடவை குலுங்கியது; பிறகு நகரத் தொடங்கியது.

வார்னெட் ஏதோ வெகு தூரம் உல்லாச யாத்திரை செல்பவனைப்போல் சிறிது சௌகரியமாகச் சாய்ந்து கொள்ள முயற்சித்தான்.

அவ்வளவுதான்! அவனுக்குப் பின்னால் இருந்தவன், ''ஐயோ! நான் செத்தேன். என்னை நசுக்கிக் கொன்று விடுவாய் போலிருக்கிறதே!'' என்று அலறினான்.

''உனக்குக் கஷ்டத்தைக் கொடுத்ததற்காக வருந்துகிறேன்'' என்று வார்னெட் சாந்தமாகக் கூறி, தன் தேகத்தைக் குறுக்கிக் கொண்டு உட்கார்ந்தான்.

இதுவரையில் விறைப்பாக இருந்த தன் தேகத்தை வார்னெட் சிறிது தளர்த்தினான். எனவே ரயில் வண்டி குலுங்குவதற்குத் தகுந்தாற் போல் அவன் தேகமும் குலுங்கியது.

''உன் கையை இப்படி நீட்டு'' என்றான் வார்னெட்டின் நண்பன்.

வார்னெட் அவனைப் பார்க்காமலேயே தன் கையை நீட்டினான். நெருக்கத்தினால் அவன் முகத்தைத் திருப்ப முடியாததே அதற்குக் காரணம்.

வார்னெட்டின் கையில் அவன் நண்பன் ஒரு ரொட்டித் துண்டை வைத்தான். அதைக் கடிக்க முற்பட்ட போதுதான் தனக்குப் பசியாக இருப்பது வார்னெட்டுக்குத் தெரிந்தது!

''நீ எப்போது இங்கு வந்து அகப்பட்டுக் கொண்டாய்!'' என்று கேட்டான் வார்னெட்.

''பதினைந்து மாதங்களுக்கு முன்'' என்றான் அவன் நண்பன்.

அதைக் கேட்ட வார்னெட் மெதுவாகச் சீட்டியடித்தான்.

''அவனுக்குக் கொஞ்சம் காற்று விடுங்கள். அவன் உயிர் போய்க் கொண்டிருக்கிறது'' என்று வண்டியின் ஓர் ஓரத்திலிருந்து ஒரு கூக்குரல் கேட்டது.

அவனைச் சுற்றியிருந்த கைதிகள் காற்றுப் போவதற்காகச் சிறிது இடம் விட முயற்சித்தனர். ஆனால் அவர்களால் என்ன செய்ய முடியும்! இடைவெளி இருந்தால்தானே நகருவதற்கு! எனவே, அவன் உயிர் கொஞ்சம் கொஞ்சமாகப் பிரிந்து சென்று கொண்டிருந்தது.

* * *

''நீ என்ன வேலை செய்து கொண்டிருந்தாய்!'' என்றான் வார்னெட் நண்பனைப் பார்த்து.

''நான் ஒரு வக்கீலிடம் குமாஸ்தாவாக இருந்து வந்தேன்.''

''உனக்குக் கல்யாணம் ஆகி விட்டதா!''

''ஆகி விட்டது. இரண்டு குழந்தைகள்—ஒரு பையனும் ஒரு பெண்ணும் இருக்கிறார்கள்.''

''எனக்கு ஒரு குழந்தை—ஒரு பெண் இருக்கிறாள்'' என்றான் வார்னெட்.

இவ்வாறாக இருவரும் சில நிமிஷ நேரம் பரஸ்பரம் க்ஷேமலாபங்களை விசாரித்துக் கொண்டனர்.

வார்னெட் நண்பனின் முகத்தை உற்றுப் பார்த்தான். அவன் மிகுந்த சாந்த குணமும் இரக்க சித்தமும் உள்ளவன் என்பதை அவன் முகம் காட்டியது. அவனுக்கு அத்தகைய நண்பனை கிடைத்தது பெரும் அதிர்ஷ்டம் என்று வார்னெட்டுக்குத் தோன்றியது.

''நீ மன உறுதி உள்ளவன்தான்'' என்றான் வார்னெட்.

''ஆனால், கைதிகளை வரிசையாக நிறுத்தி என் பெயரைக் கூப்பிடும் போது என் மன உறுதி தவிடு பொடியாகி விடுகிறது'' என்றான் நண்பன்.

வார்னெட் மௌனமாக இருந்தான். கைதிகளுடன் பெயர் தெரியாமல் கூட்டத்தோடு கூட்ட



மாக இருக்கும் போது மனதுக்குத் தைரியமாக இருக்கிறது. ஆனால் கைதிகளைச் சிறையின் தாழ்வரையில் நிறுத்தி ஒவ்வொருவராகப் பெயர் சொல்லிக் கூப்பிடும்போது உயிரே போய் விடுவது போல் இருக்கிறது.

அதனால்தான் மிருகங்களைப்போல் நூற்றைம்பது பேர் அடைக்கப்பட்டுள்ள அந்த வண்டியில் இருக்கும் போது தங்களை யாரும் அவமதிக்க முடியாத ஓரிடத்தில் இருப்பது போல அவர்களுக்குத் திருப்தி ஏற்பட்டது!

காவலர்கள் யந்திர பீரங்கியால் சுடுவதாக இருந்தால் கூட கண்மூடித்தனமாகக் கைதிகளின் கூட்டத்தை நோக்கித்தானே சுடுவார்கள்! அந்தக் கூட்டத்தில் தனியாக ஒருவனை மாத்திரம் குறி வைத்துச் சுட முடியாது அல்லவா!

கொடும் வெய்யிலில் ரயில் வண்டி ஆடிக் கொண்டும் உலுக்கிக் கொண்டும் சென்றது. சகிக்க முடியாத அந்த உஷ்ணம் ரயில் வண்டிக்குள் இருந்த பலவீனமான மற்றும் பலரைப் பலி கொண்டது. உயிருடனிருந்தவர்கள் 'உஷ்ணம் தாங்க முடியவில்லையே' என்றும், 'தாகம், தாகம்' என்றும், 'பசி, பசி' என்றும் அலறித் துடித்துக் கொண்டிருந்தனர்.

வார்னெட்டும் அவனது நண்பனும் மாத்திரம் யாதொரு புகாரும் சொல்லவில்லை. அலறிய மற்றக் கைதிகளிடம் அவ்விருவரும் அநுதாபம் கொண்டார்கள்.

"இவ்விதம் ஏன் வீணைக் கத்துகிறீர்கள்! இப்படிக் கத்தினால் உடலில் இருக்கும் கொஞ்சநஞ்ச பலமும் போய் விடும்" என்று எச்சரித்தான் வார்னெட்.

"இந்த நரகத்தில் இருக்கும் வரையில் மன உறுதிக்கு வழியில்லை" என்று முணு முணுத்தான் வார்னெட்டுக்கு அருகில் இருந்த ஒருவன்.

மூச்சுத் திணறியும் தாகத்தினாலும் பசியினாலும் இறந்தவர் போக மற்றக் கைதிகளின் வாயும் தொண்டையும் பாறை போல் வறண்டு கிடந்தன.

ஆனால் வார்னெட், அவனது நண்பன் இருவருக்கும் மாத்திரம் வாயும் தொண்டையும் வறண்டு போகவில்லை. அது அந்தச் சூழ்நிலையில் ஒரு மகத்தான சாதனை என்பதில் சந்தேகமில்லை. அதைக் குறித்து அவ்விருவரும் பெருமிதம் அடைந்தார்கள். அவ்விதம் வறண்டு போகாமல் இருந்தால்தான் ஐந்தாம் நாள் அவர்கள் நிலைமையைச் சமாளிக்க முடியும். நாக்கு வறண்டவர்கள் ஐந்தாம் நாள் இறப்பது நிச்சயம் அல்லவா! இது அவர்களுக்கு நன்றாகத் தெரியும்.

"மன உறுதி இருந்தால் இத்தனை பேர்கள் உயிர் இழக்கும்படி நேர்ந்திராது" என்றான் வார்னெட்.

அதே சமயம் வண்டியின் ஓரத்தில் ஓர் அழுகைக்குரல் கேட்டது. "ஒரு சொட்டுத் தண்ணீர் கூட இல்லாமல் காவலர்கள் நம்மையெல்லாம் இப்படித் தவிக்க விட்டிருக்கக் கூடாது" என்று இளைஞன் ஒருவன் விம்மினான்.

வார்னெட்டும் அவனது நண்பனும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள். பாவம்! வாழ்க்கையின் கஷ்ட நஷ்டங்களைத் தெரிந்து கொள்ளாத அந்த இளைஞனுக்காக அநுதாபப் பட்டார்கள்.

வண்டிக்குள் இருந்த சில கைதிகள் எழுந்து உட்கார முயற்சித்தார்கள். மற்றும் சிலர் ஒருவர் மீது ஒருவர் சாய்ந்து படுக்க முயற்சித்தார்கள்.

வார்னெட் ஒரு சிறு துண்டு ரொட்டியை வெகு நேரமாகச் சுவைத்துக் கொண்டிருந்தான். அதை விழுங்கி விட அவனுக்கு மனமில்லை. விழுங்கி விட்டால் நா வறண்டு மற்றவர்களுக்கு ஏற்பட்ட கதி தனக்கும் ஏற்பட்டு விடுமோ என்று பயந்தான்.

வண்டிக்குள் அடிக்கடி எழுந்த முணு முணுப்புகள் நாழிக்கு நாழி குறைந்து கொண்டிருந்தன. ஏனெனில், பெரும்பாலோர் முணுமுணுக்கும் சக்தியைக் கூட இழந்து விட்டனர்.

"ஐந்தாவது நாள்தான் மிகவும் கஷ்டமாக இருக்கும். அதற்கு மறுதினம் இதிலிருந்து நமக்கு விடுதலை கிடைத்து விடும்" என்றான் வார்னெட்டின் நண்பன்.

'ஆமாம்' என்பதற்கு அறிகுறியாக வார்னெட் தலையை அசைத்தான். தான் அனுபவித்துத் தீர வேண்டிய கஷ்டங்களைக் குறித்து மனதையும் தேகத்தையும் அலட்டிக் கொள்ளாமல் எப்போதும் புன் முறுவலுடன் இருக்கும் ஒரு நண்பன் பக்கத்தில் இருப்பது அவனுக்குப் பெரிதும் ஆறுதலாக இருந்தது.

வார்னெட்டின் எண்ணத்தை அறிந்து கொண்டவன் போல் அவன் நண்பன் அவனைப் பார்த்துச் சிரித்தான். வார்னெட்டும் சிரிப்பின் மூலம் தன் பதிலைத் தெரிவித்தான்.



வண்டி ஓரத்தில் அழுது கொண்டிருந்த இளைஞனுக்கு மகா பயங்கரமான அந்தகாரத்தில் ஒரு மின்னொளி தோன்றுவது போலிருந்தது. "வண்டி நிற்கப் போகிறது, வண்டி நிற்கப் போகிறது" என்று அவன் கத்தினான். அவனது கூக்குரலில் எல்லையற்ற மகிழ்ச்சி தொனித்தது.

ரயில் வண்டி நின்றது. அவ்வளவுதான்! வண்டிக்குள் இருந்த கைதிகள் யாவரும் வெறி பிடித்தவர்களைப் போல் கதவுக்கு அருகில் ஓட முயற்சித்தனர். அந்த முயற்சியில் ஒருவர் மீது ஒருவர் விழுந்து மிதித்தனர். எங்கும் கூக்குரல்களும் வசை மொழிகளும் பீறிட்டெழுந்தன.

கதவுக்கு அருகில் இருந்தவர்கள் தங்கள் கைகளில் உதிரம் பெருகும் வரையில் இடைவிடாது கதவை இடித்தார்கள்.

"இவர்கள் இப்படி நாக்கு வறண்டு போகும்படி கூக்குரல் விடுகிறார்களே, ஐந்தாம் நாள் இவர்களின் கதி என்ன ஆகப் போகிறதோ!" என்று மிகவும் வருந்தினான் வார்னெட்டின் நண்பன்.

# அஜீரணத் தொல்லை அகன்றது

## பிணியுற்றோருக்கு ஒரு பெரிய செய்தி

உங்களுக்குப் பிடித்த பண்டங்களைச் சாப்பிடும் போதெல்லாம் அஜீரணத்தினால் நீங்கள் அல்லற்படுகிறீர்களா? மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பவுடர் உதவியைக் கொண்டு ருசிகரமான கறிகள், சட்னிகள், காரமோண்டிகள், மற்றும் பலபதார்த்தங்கள் இவற்றுடன் கூடிய நல்ல சாப்பாட்டை மீண்டும் சாப்பிட்டு மகிழலாம் என்று ஆயிரக்கணக்கான பேர் உணர்ந்து வருகின்றனர். இந்த ஆச்சரியகரமான ஔஷதம் சகலவிதமான அஜீரண நோய்களையும், அசௌகரியங்களையும் மாத்திரம்தான் குணப்படுத்துகிறது என்பதில்லை; அஜீரணம் ஏற்படக்கூடிய காரணங்களையும் தடுத்து தேகநிலையைப் பாதுகாத்து உதவவும் செய்கிறது. உலகமுழுவதிலுமுள்ள ஆயிரக்கணக்கான மக்களுக்கு அவர்கள் இஷ்டம் போல எப்போது வேண்டுமாயினும் என்ன வேண்டுமாயினும் சாப்பிடக்கூடியவாறு அவர்களது அஜீரணத்தொல்லைகளை நீக்கி உதவியளித்து மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பவுடர் அவர்களுக்கு ஒரு புது வாழ்வை யளித்திருக்கிறது.

ஞாபகமிருக்கட்டும், மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பவுடர் உலக பிரசித்திபெற்றது. எனவே அநேகம் பேர் அதைக் காப்பியடிக்கப் பார்க்கிறார்கள். ''அலெக்ஸ் ஸி. மக்ளீன்'' என்கிற கையொப்பம் இருக்கிறதா என்று பார்த்து உண்மையான சரக்கையே வாங்குங்கள்.







M8Y-3 TAM.

# மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பவுடர்

வியாபார விவரங்களுக்கு:

ஜே. எல். மாரிஸன், ஸன் & ஜோன்ஸ் (இந்தியா) லிமிடெட்

தபால் பெட்டி 6527, பம்பாய் 26; தபால் பெட்டி 387, கல்கத்தா

தபால் பெட்டி 1370, மதராஸ்




# லிப்டன்ஸ்

ஹிமாலயன்
கோல்டன் டஸ்ட்
டீ

'சிறந்த
தங்க நிற
பானம்'



LGDX (B) 46 TM

“ரயில் வண்டிதான் நின்று விட்டதே! அவர்கள் ஏன் இன்னும் நம்மையெல்லாம் வெளியே விடாமல் அடைத்து வைத்திருக்கிறார்கள்!” என்று கத்தினான் அந்த இளைஞன்.

அவன் இப்படிக் கத்திக் கொண்டிருந்தால் ஐந்தாம் நாள் உயிருடன் இருக்க முடியாதே என்று வார்னெட்டுக்கு வேதனையாக இருந்தது. “அவர்கள் கதவைத் திறக்கப் போவதில்லை. இஞ்ஜினை மாற்றுவதற்காகத் தான் இங்கு வண்டியை நிறுத்தியிருக்கிறார்கள்” என்று விளக்கினான் வார்னெட்.

மற்றவர்கள் யாரும் அதைக் கேட்கத் தயாராக இல்லை. காற்று, தண்ணீர், உணவு இல்லாமல் பாதிப் பிரக்ஞையை இழந்திருப்பவர்களின் செவிகளில் வார்னெட்டின் விளக்கம் ஏறுமா!

* * *

மறுபடியும் ரயில் வண்டி நகர ஆரம்பித்தது. வார்னெட்டைச் சுற்றியிருந்தவர்கள் யாவரும் அவனை வெறுத்தனர். ரயில் வண்டியின் கதவு திறக்கப்படாததற்கு அவன் பொறுப்பாளி அல்லவாயினும், அவனைச் சுற்றி இருந்தவர்களுக்குக் கண்மூடித்தனமாக அவன் மீது துவேஷம் உண்டாயிற்று. அதன் காரணமாக, அருகில் இருந்தவர்கள் வார்னெட்டைத் தங்களுடைய முழங்கைகளால் இடித்துத் தள்ளினர். தூரத்தில் இருந்தவர்கள் கட்டெரித்து விடுபவர்கள் போல் அவனைப் பார்த்தனர்.

எனினும் சில நிமிஷ நேரத்தில் அவர்களின் துவேஷ உணர்ச்சி மறைந்து விட்டது. அவர்களுடைய சரீரத்தில் சக்தி இருந்தால்தானே மேற்படி உணர்ச்சி நீடிக்க முடியும்!

சிறிது நேரத்தில் வண்டிக்குள் முக்கலும் முனகலும் அதிகமாயின. வண்டிக்குள் உயிரற்ற பிணங்களும் அடைபட்டுக் கிடந்ததால் ஏற்பட்ட கொடிய நாற்றம் எங்கும் பரவி நரகமாகியது.

“இதைக் காட்டிலும் வெட்கக்கேடு உலகில் வேறு என்ன இருக்கமுடியும்! நம்மையெல்லாம் இப்படி நாய்களைப்போல் சாகும்படி விட்டு விட்டார்களே, பாதகர்கள்!” என்றான் அந்த இளைஞன்.

அவன் தேகத்தில் கொஞ்சம் சக்தி இருந்தது. அவன் வீறிட்டுக் கத்தினான். தலையைப் பிய்த்துக் கொண்டான்.

அந்த இளைஞனின் நிலையைப் பார்க்க வார்னெட்டுக்கு மிகவும் பரிதாபமாக இருந்தது. அவனுக்கு ஏதாவது உதவி செய்ய வேண்டும் என்பது வார்னெட்டின் ஆர்வம். ஆனால் அந்த நிலையில் அவன் என்ன உதவி செய்ய முடியும்!

ரயில் வண்டிக்குள் சிறிது வெளிச்சம் தெரிந்ததிலிருந்து மறுநாள் பொழுது விடிந்து விட்டது என்பதை வார்னெட் தெரிந்து கொண்டான்.

“நான் வீட்டிலிருக்கும்போது இந்த நேரத்தில் தான் படுக்கையிலிருந்து எழுந்திருப்பது வழக்கம்” என்றான் வார்னெட்டின் நண்பன்.

பழைய ஞாபகத்தினால் ஏற்பட்ட அற்ப சந்தோஷமும் அவனது கண்களுக்குச் சிறிது பிரகாசத்தைக் கொடுத்தது.

“என் படுக்கை யறைக்கு எதிரே ஒரு மரம் இருக்கிறது. பொழுது விடியும்போது அந்த மரத்தில் உள்ள பட்சிகள் கோலாகல சப்தத்துடன் பாடும். அதனால் நான் விழித்துக் கொள்வேன். பட்சிகளைக் கண்டால் உனக்குப் பிடிக்குமா!” என்று கேட்டான் அவன்.



“நான் இந்தப் புடவையை வாங்கிக் கொள்கிறேன். ஆனால் ஒரு நிபந்தனை. என் கணவரிடம் கொண்டு போய்க் காண்பிப்பேன். அவருக்குப் பிடிக்கவில்லை என்றால்.........நீங்கள் திருப்பி எடுத்துக் கொள்ளக் கூடாது. உங்களை நம்புவதற்கில்லை. முன்பு அப்படித்தான் திருப்பி எடுத்துக் கொண்டு விட்டீர்கள்.”

---

“ஏன் பிடிக்காது! பட்சிகள் என்றால் எனக்கு உயிர்” என்றான் வார்னெட் உற்சாகத்துடன்.

“மரம் நிறையப் பட்சிகள் கூவிக் கூத்தாடும் போது எவ்வளவு ஆனந்தமாக இருக்கிறது!”

“ஆமாம், ஆமாம்” என்று ஆமோதித்தான் வார்னெட்.

“பட்சிகள் குதூகலமாகப் பறந்தோடுவதைக் கவனித்துக் கொண்டே நான் க்ஷவரம் செய்து கொள்வேன். அப்போது என் மனைவி சூடாகக் காப்பி கொண்டு வருவாள். வாழ்க்கையில் அதைக் காட்டிலும் இன்பம் வேறு என்னதான் இருக்கிறது!”

“என் வாழ்க்கையில் அத்தகைய காரியங்களுக்கெல்லாம் நேரமிருந்ததில்லை” என்றான் வார்னெட் எங்கேயோ பார்த்துக் கொண்டு.

இவ்வாறு வார்னெட் கூறியதைக் கேட்ட நண்பனுக்கு அவன்மீது பொறாமை உண்டாயிற்று. வார்னெட்டைப்போல் தான் அவ்வளவு உயர்ந்தவன் அல்ல என்று அவன் நண்பனுக்குத் தோன்றியது. ஏனெனில், வார்னெட் தன் இலட்சியத்தைக் காட்டிலும் வாழ்க்கை இன்பங்களைப் பெரிதாகக் கருதவில்லை அல்லவா!

இலட்சியவாதியான வார்னெட் தன் நண்பனின் கையை அன்புடன் பிடித்துக் கொண்டான். அவனிடம் தன் வாழ்க்கை வரலாற்றை விவரமாகச் சொல்ல ஆரம்பித்தான்.

ஐந்தாம் நாள் உதயமாயிற்று. அன்று ரயில் வண்டியில் முந்திய தினங்களைப்போல் சந்தடியோ, முக்கலோ, முனகலோ அதிகமில்லை! சிலர் விசித்திரமாக மூச்சு விடுவது மாத்திரம் கேட்டது.

பலசாலிகள் மாத்திரம் மேலே இருந்தனர். அவர்களின் சரீரங்களுக்குக் கீழே அகப்பட்டுக் கொண்டவர்கள் உயிருக்கு ஊசலாடிக் கொண்டிருந்தனர். ஏற்கெனவே உயிரிழந்தவர்கள் அதிர்ஷ்டசாலிகளாகக் கருதப்பட்டனர்!

வார்னெட் தன் நண்பனின் முகத்தைத் தொட்டுப் பார்ப்பதற்காகச் சிறிது அசைந்து கொடுத்தான். ஆனால் தன் நண்பனை அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை. ஏனெனில் வார்னெட்டின் கண் பார்வை மங்கத் தொடங்கியது. அவனுக்கு முந்திய தினங்களைப் போல் எதுவும் தெளிவாகத் தெரியவில்லை. அவனுக்கு மூச்சுத் திணறியது. தன்னறியாமல் அவன் பேய்ச் சிரிப்பொன்று சிரித்தான்.

மனித சரீரங்களாகிற சவக் கடலின் மீது, தான் மிதப்பது போன்ற உணர்ச்சி வார்னெட்டுக்கு உண்டாயிற்று. எங்கும் அமைதியும் ஆனந்தமும் நிலவும் ஓர் உலகத்துக்குத் தான் செல்லுவது போல் அவனுக்குத் தோன்றியது. அப்போது அவனுக்கு ஒன்றும் தேவையில்லை. குளிர்ச்சியான இனிய தண்ணீரை மாத்திரம் கொஞ்சம் ருசி பார்த்தால் போதும். அவனது ஆத்மா பூரண திருப்தி அடைந்துவிடும்.

திடீரென்று அவன் மூளையில் ஓர் எண்ணம் தோன்றியது. துவேஷத்தை, வெறுப்பை, ஆத்திரத்தை அடிப்படையாகக் கொண்ட எண்ணம். சிறிது நேரத்தில் அந்த எண்ணம் கொழுந்து விட்டு வளர்ச்சிபெறத் தொடங்கியது. அது அவன் உதிரத்தில் கலந்து நரம்புகளின் வழியாகத் தேகமெங்கும் பரவியது; எலும்புகள் வரையில் ஊடுருவிப் பாய்ந்தது.

அதாவது அவனுக்குத் தான் உயிர் வாழ்வதற்கு யாரோ முட்டுக் கட்டையாக இருப்பதுபோல் தோன்றியது. சுகபோகங்கள் நிறைந்த ஓர் உலகத்துக்குத் தான் செல்லுவதற்குத் தடையாக ஒரு மனிதன் நின்று கொண்டிருப்பதாக அவன் எண்ணினான்.

அது ஐந்தாம் தினமானதால் வண்டியில் அடைக்கப்பட்டிருந்தவர்களில் பெரும்பாலோருடைய கணக்குத் தீர்ந்து விட்டது! முந்திய தினங்களைப் போல் வண்டிக்குள் எவ்விதச் சந்தடியும் இல்லை: முக்கல், முனகல், முணுமுணுப்பு, பெருமூச்சு எதுவும் இல்லை! வண்டிக்குள் இருந்த மனித சரீரங்களாகிய எரிமலை முற்றிலும் அணைந்து குளிர்ந்து விட்டது!

கடைசியாக, வார்னெட்டுக்குத் தன் தலையைச் சிறிது தூக்குவதற்கு சக்தி யிருந்தது. அவன் தலையைச் சிறிது தூக்கித் தன் நண்பனைப் பார்த்தான். நண்பனின் உருவம் மிகவும் மங்கலாக வார்னெட்டுக்குத் தெரிந்தது. அவன் புன்முறுவல் செய்வதும் மங்கலாகத் தெரிந்தது.

"இன்று ஐந்தாம் நாள். நாளை நாம் குறிப்பிட்ட இடத்துக்குச் சென்று விடுவோம்" என்று நண்பன் மெதுவாகக் கூறியது வார்னெட்டுக்கு அரைகுறையாகக் கேட்டது.

"என்னை ஏன் வாய்திறந்து பேசும்படி செய்கிறாய்!" என்றான் வார்னெட். அவன் வாய் குளறியது.

"நமக்கு இனிமேல் பேசுவதற்குக் கூட சக்தியில்லை" என்று சைகை காட்டினான் வார்னெட்டின் நண்பன்.

"என்னுடன் பேச்சுக் கொடுத்து என் பலத்தைக் குறைப்பதற்காகவே உன்னை என் பக்கத்தில் வைத்திருக்கிறார்கள் போலிருக்கிறது" என்றான் வார்னெட். அவனை இனந் தெரியாத ஒரு வெறி ஆட்கொண்டது.

"நான் இறந்து போக விரும்பவில்லை. இந்த நரகத்திலிருந்து உயிருடன் வெளியேற வேண்டும் என்பதே என் விருப்பம்" என்றான் வார்னெட்.

"பொறுத்துக் கொள். அதிகமாகப் பேசாதே. நாளை வெளியேறி விடலாம்" என்றான் அவனுடைய நண்பன்.

அதற்குப் பதிலாக வார்னெட் ஏதோ உளறினான்.

"உனக்கு ஜுரம் வேகமாக இருக்கிறது. நாளை வரையில் மன உறுதியைக் கைவிட்டு விடாதே" என்று புத்திமதி கூறினான் அவன் நண்பன்.

வார்னெட் தன் நண்பனை உற்றுப் பார்த்தான். அவனது கைகள் மெதுவாக மேலே எழும்பின. அவனது நண்பனின் குரல் வளையைப் பற்றின.

பலவீனமாக இருந்த வார்னெட்டுக்கு எங்கிருந்தோ பேயைப்போல் பலம் வந்து விட்டது. அவன் கைகள் நண்பனின் குரல் வளையை மேலும் மேலும் இறுக்கின.

ஐந்தாம் நாள் பலியானவர்களில் வார்னெட்டின் நண்பன்தான் கடைசியானவன்!

தான் ஏங்கிக்கிடந்த வேறு ஒரு உலகத்துக்குச் செல்லுவதற்குத் தடையாக இருந்த ஒரு முட்டுக் கட்டையை அப்பால் தள்ளுவது போன்ற திருப்தி வார்னெட்டின் மனதில் ஏற்பட்டது!

பின்னர் அந்த உலகத்துக்குச் செல்ல அவன் அதிக நேரம் காத்திருக்கும்படி நேரவில்லை!

மறுநாள் மேற்படி ரயில் வண்டி திறக்கப்பட்டபோது உள்ளே பூரண அமைதி நிலவியிருந்தது! ஒரு கைதியைக் கூடச் சாட்டையால் அடித்து இம்சித்துக் கீழே இறக்கும்படியான அவசியம் காவலர்களுக்கு ஏற்படவில்லை!



தென் இந்திய ரயில்வேயைச் சேர்ந்த இன்ஜினியர் ஸ்ரீ எம். எஸ். விஸ்வநாதன் அவர்களின் புதல்வி லீலாவதிக்கும், மேற்கு பிராந்திய ரயில்வேயைச் சேர்ந்த இன்ஜினியர் ஸ்ரீ கே. சுப்ரமண்யத்துக்கும் சமீபத்தில் சென்னை நுங்கம்பாக்கம் ஸ்டெர்லிங் ரோடு பங்களாவில் சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. ரயில்வே அதிகாரிகளும் பிரமுகர்களும் நண்பர்களும் திருமணத்துக்கு விஜயம் செய்து தம்பதிகளை ஆசீர்வதித்தனர். வாழ்க! சுப்ரமணியம் லீலாவதி!




சிந்திரி ரசாயன எரு உற்பத்திச்சாலை ரசாயன எரு உற்பத்திச் சாலையில் ஒரு பகுதி.

சிந்திரி ரசாயன எரு உற்பத்திச்சாலையைப்பற்றிய செய்திகளைச் சமீபத்தில் படித் திருப்பீர்கள். மத்திய சர்க்காரால் இருபத்து மூன்று கோடி ரூபாய் செலவில் நிறுவப்பட்டுள்ள இம் மகோன்னத தொழிற்சாலை பிரதமர் நேருவால் மார்ச் மாதம் இரண்டாம் தேதி திறந்து வைக்கப்பட்டது.

சிந்திரியைப் பற்றிய விவரங்களை அறியுமுன் நம் நாட்டிற்கு இத் தொழிற்சாலையின் மூலமாகக் கிடைக்க விருக்கும் பல அனுகூலங்களையும் கிடைக்கப் போகும் உதவிகளையும் சற்று ஆராய்ந்து பார்ப்போம்.

நில வளத்திலும் நீர் வளத்திலும் நம் நாடு சிறந்ததெனினும் நாளுக்கு நாள் பெருகி வரும் ஜனத் தொகைக்குப் போதுமான உணவு தானிய உற்பத்தி நம் நாட்டில் இல்லை என்பது நாம் அனுபவித்து வரும் உண்மை. கடந்த அனேக நூற்றாண்டுகளாய்ச் சாகுபடி செய்யப்பட்டு வந்த நிலத்தின் இயற்கைச் செழிப்பு ரஸாயன உரங்களின் உதவியில்லாததால் மற்ற நாடுகளில் கிடைக்கும் தானிய உற்பத்திக்கு மிகவும் குறைவாக ஒப்பிடப்படுகிறது. நிலம் செழிப்பாகவும் நீர் வசதி தாராளமாகவும் இருந்தால் மட்டும் போதுமானதல்ல. அதிகப்படியான தானிய விளைச்சலுக்குச் செயற்கை ரசாயன எருவின் உதவியும் மிக அவசியம். இந்த உண்மையைச் செயற்கை ரஸாயன எருவைக் கையாண்டு சுபிட்சமடைந்த இதர நாடுகள் நமக்குக் கற்றுக் கொடுத்திருக்கிறது.

சென்ற உலக யுத்தத்துக்கு முன் வெளி நாடுகளிலிருந்து வருஷத்தில் அனேக லக்ஷம் டன்கள் ரசாயன உரத்தை இந்தியா இறக்குமதி செய்து வந்தது. ஆனால் யுத்தத்தின் காரணமாக உலக மெங்கும் ரசாயன முறையில் உற்பத்தி செய்யப்பட்ட உரங்களுக்குப் பஞ்சம் ஏற்படவே இந்தியாவுக்குப் போதுமான அளவு உரம் ஏற்றுமதி செய்ய எந்த நாடும் முன்வரவில்லை. இக்காரணங்களை முன்னிட்டு நம் நாட்டிலேயே ரசாயன முறையில் வருஷந்தோறும் சுமார் மூன்றரை லக்ஷம் டன் எரு உற்பத்தி செய்யத் தகுந்த ஒரு பிரும்மாண்டமான தொழிற் சாலையைச் சீக்கிரத்திலேயே நிறுவுவதற்குச் சர்க்கார் 1944-ம் வருஷமே தீர்மானித்தனர். இத் தொழிற் சாலையைத் தன் மேல் தாங்கும் பெருமை பீகார் மாகாணத்தில் தாமோதர் நதிக் கரையில் "தான்பாத்" என்ற ஊரிலிருந்து பதினாறு மைல் தூரத்திலுள்ள சிந்திரிக்குக் கிடைத்திருக்கிறது.

தொழிற்சாலை நிர்மாணிக்கப் படுமுன் சிந்திரி சாதாரணமான தொரு சிறிய கிராமமாகத்தான் காட்சியளித்தது. மற்ற எல்லா இடங்களையும் விட்டு விட்டு இந்தப் பட்டிக்காட்டை எதற்காக இவ்வளவு சிரமப்பட்டுப் பொறுக்கி எடுத்தார்கள் என்று கேட்கலாம். அதற்குக் காரணங்கள் இல்லாமலில்லை. இத் தொழிற்சாலையில் தினப்படி எதிர்பார்க்கப் படும் ஆயிரம் டன் உர உற்பத்திக்காகத் தினமும் நூற்று இருபது லக்ஷம் காலன் தண்ணீரும், ஆயிரத்து அறுநூறு டன் நிலக்கரியும் தேவையாக இருக்கிறது. அப்பா! இத்தனை ஜலமும் கரியும் எதற்காக என்று யோசிக்கிறீர்களா? ஆம், இதைத் தவிர தினப்படி இரண்டாயிரம் டன் "ஜிப்ஸம்" என்ற கந்தகம் கலந்த ஒரு தாதுப் பொருளும் இருந்தால் தான் நாள் ஒன்றுக்கு சுமார் ஆயிரம் டன் "அம்மோனியம் ஸல்பேட்" என்ற மதிப்புள்ள உரம் தயார் செய்ய முடியும்!

இந்தக் காரணங்களை முன்னிட்டுத்தான் சிந்திரிக் கிராமத்தைத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள். இந்தக் கிராமம் தாமோதர் நதிக் கரையி லிருப்பதால் ஜல வசதியைப் பற்றிக் கவலை கிடையாது. தேவையான அளவுக்கு மேலாகவே தொழிற்சாலைக்கும் அதில் வேலை செய்யும் ஆயிரக்கணக்கான தொழிலாளிகளின் விடுதிகளுக்கும் இந்நதியிலிருந்து தண்ணீர் கிடைக்கிறது.

பீகார் மாகாணம் இந்தியாவின் "நிலக்கரிச் சுரங்கம்" என்று போற்றப்படுகிறது. நம் நாட்டின் மொத்த நிலக்கரி உற்பத்தியில் பெரும்பாலான பங்கு இந்த மாகாணத்திலிருந்து கிடைக்கிறது. இச்சுரங்கங்களுக்கு மத்தியில் அமைந்துள்ள சிந்திரி நிலக்கரியைப் பற்றி ஏன் கவலைப்பட வேண்டும்?



சிந்திரித் தொழிற்சாலையின் உட்புறத்தில் ஒரு காட்சி.

"ஜிப்ஸம்" என்று கூறப்படும் கந்தகக் கலப்புள்ள தாதுப் பொருள் பிகானீர், ஜோத்பூர் சமஸ்தானங்களில் பெருவாரியாக பூமியிலிருந்து வெட்டி எடுக்கப் படுகிறது. தேவையான அளவு "ஜிப்ஸ"த்தை அங்கிருந்து ரயில் மூலம் கொண்டு வரலாம்.

சிந்திரியில் உற்பத்தியாகும் "அம்மோனியம் ஸல்பேட்" என்று கூறப்படும் உரம் எப்படித் தயார் செய்யப் படுகிறது என்ற ரசாயன விவரங்களை இக்கட்டுரையில் விவரித்து எழுதுவது சாத்தியமில்லை. "ஜிப்ஸம்" பூமியிலிருந்து வெட்டி எடுக்கப்பட்டதும் மஞ்சள் வெள்ளை கலந்த சாதாரண களிமண் கட்டிகளைப் போலிருக்கும். அதை இயந்திரங்களின் உதவியால் அரைத்து மாவாகச் செய்து கொள்ளப் படுகிறது. பிறகு "அம்மோனியம் கார்பனேட்" கலந்த நீரை அரைத்த மாவுடன் கலந்து பலப்பல இயந்திரங்களின் வழியாய்க் கொண்டு செல்லப் படுகிறது. கடைசியில் நீரை வடிக்கட்டி எடுத்து அதிலிருந்து "கால்ஷியம் கார்பனேட்" என்னும் பொருளை நீக்கி விட்டு மிகுதியுள்ள குழம்பை இயந்திரங்களின் உதவியால் உலர்த்திய பிறகு "அம்மோனியம் ஸல்பேட்" என்ற எரு கிடைக்கிறது. கட்டிகளாக இருக்கும் இதைச் சர்க்கரையைப்போல் சிறு சிறு கற்களாக உடைத்து மூட்டைகளில் நிரப்பி வெளியே அனுப்புகிறார்கள். ஜிப்ஸம் கட்டிகளை அரைத்துக் கொடுப்பது முதல் முடிவில் கிடைக்கும் "அம்மோனியம் ஸல்பேட்" என்ற உரத்தை மூட்டைகளில் அளந்து நிரப்பி வெளியே அனுப்புவது வரை எல்லாக் காரியங்களையும் இயந்திரங்களே செய்து முடிக்கின்றன.

"பூ! இவ்வளவுதானே. இதற்கு இருபத்து மூன்று கோடி ரூபாய் செலவில் எதற்காக இவ்வளவு பெரிய தொழிற்சாலை?" என்று சிலர் கேட்கலாம். அவர்கள் ஒரு முறை சிந்திரிக்கு வந்து பார்த்தால் அது மிகவும் குறைந்த தொகை என்ற முடிவுக்கு வந்து விடுவார்கள்.

இத் தொழிற்சாலையில் ஒரு பாகத்திலிருந்து இன்னொரு பாகத்திற்குப் போக வேண்டுமானால் குறைந்தது எட்டு பர்லாங்கு தூரமாவது நடந்தாக வேண்டும் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்! இங்கு ஸ்தாபிக்கப்பட்டுள்ள பூதாகாரமான இயந்திரங்களின் மொத்த எடை நாற்பத்தையாயிரம் டன்களுக்குமேல் ஆகிறது. இதைத் தவிர பன்னிரண்டாயிரம் டன் எடைக்கு மேல் இரும்புத்தூண்களும் இரும்பு உத்தரங்களும் உபயோகிக்கப் பட்டுள்ளன. சிந்திரி தொழிற்சாலையைச் சுமார் நூறு வெளி நாட்டு, உள் நாட்டு கம்பெனிகள் கட்டியிருக்கின்றன.

இந்தத் தொழிற்சாலையின் உர உற்பத்தி நாளுக்கு நாள் அதிகரித்து வருகிறது. இன்னும் சில வாரங்களில் அதிக பட்சமாக கணக்கிடப்பட்டிருக்கும் ஆயிரம் டன் எருவைத் தினந்தோறும் இத் தொழிற்சாலை உற்பத்தி செய்யும் என்று எதிர்பார்க்கப் படுகிறது. எரு உற்பத்தியைத் தவிர தினந்தோறும் சில நூறு டன்கள் கழிவுப் பொருள் விழுகிறது. இதிலிருந்து சில முக்கியமான துணைப் பொருள்கள் கிடைப்பதற்கும் வழியுண்டு. உதாரணமாக ஆயிரம் டன் எரு கிடைத்த பிறகு தினந்தோறும் தொளாயிரம் டன் (Calcium Carbonate Sludge) கால்ஷியம்

இருபத்துமூன்று கோடி ரூபாய் செலவில் நிறுவப்பட்டுள்ள ஆசியாவிலேயே



கார்போனட் என்ற கழிவுப் பொருள் விழுகிறது. இதிலிருந்து நாள் ஒன்றுக்கு 800 டன் உயர்தர சிமிண்ட் உற்பத்தி செய்ய ஒரு தொழிற்சாலையும் நிர்மாணிக்கப்படும். இதைத் தவிர தார், நெப்தா, பென்ஸால், எரியும் வாயு இவைகளைப் போன்ற சில ரசாயனப் பொருள்களும் கழிவுப் பொருள்களிலிருந்து உண்டாக்குவதற்குத் திட்டங்கள் இருக்கின்றன.



சிந்திரித் தொழிற்சாலையைத் திறந்து வைத்து ஸ்ரீ நேரு பேசுகிறார்.

எல்லாவற்றையும்விட முக்கியமானது நம் நாட்டில் தோன்றி யிருக்கும் சிந்திரி உர உற்பத்திச் சாலையினால் பத்து லட்சம் டன்கள் உணவு தானியங்கள் ஒவ்வொரு வருஷமும் விளைச்சலாகும். ஒவ்வொரு வருஷமும் வெளி நாடுகளிலிருந்து உணவு தானியங்களும் ரசாயன உரமும் இறக்குமதி செய்யச் செலவிடும் கோடிக் கணக்கான ரூபாய்கள் நமக்கு மிச்சப்படும்.

சென்ற 1951-ம் ஆண்டில் மட்டும் வெளி நாடுகளிலிருந்து உணவு இறக்குமதி செய்ய இந்திய சர்க்கார் 216 கோடி ரூபாய் செலவிட்டிருக்கின்றனர். ஆகையால் சிந்திரி ஒரு கற்பக தரு என்று சொன்னால் மிகையாகாது.

சிந்திரியில் இன்று மூவாயிரம் பேர் வேலை பார்க்கின்றனர். இவர்களுக்காக இதுவரை ஒரு கோடி ரூபாய் செலவில் வீடு வசதிகள் செய்து தரப்பட்டிருக்கின்றன. இவ்வீடுகள் தொழிற்சாலையின் சுற்றுப் புறங்களில் சுமார் பன்னிரண்டு மைல் விஸ்தீரணமுள்ள நிலப் பரப்பில் நிறுவப்பட்டிருக்கின்றன. இயந்திரங்களைத் துடைத்துச் சுத்தம் செய்யும் தொழிலாளிகள் முதல் எல்லோருக்கும் மின்சாரம், தண்ணீர், சுகாதார வசதிகளடங்கிய வீடுகள் அளிக்கப்பட்டிருக்கின்றன.

உர உற்பத்திச் சாலையைத் தவிர இன்னும் அநேக தொழிற்சாலைகளை இங்கு நிர்மாணிக்கச் சர்க்கார் திட்டமிட்டிருக்கின்றனர். இதை முன்னிட்டுப் பீஹார் கவர்ன்மெண்டார் இங்கு ஒரு பெரிய எஞ்சினீரிங் காலேஜ் ஒன்றைக் கட்டி யிருக்கின்றனர். இதில் நாட்டின் எல்லா பாகங்களிலிருந்தும் ஊக்கமுள்ள பல ஆயிரம் மாணவர்களுக்கு வருஷந்தோறும் இயந்திர ரசாயன சம்பந்தமான படிப்புகளுக்கு வசதி செய்யப்பட்டிருக்கிறது. இத் துறையில் மேல் நாடுகளுக்குப் போய்ப் படித்து இங்கிலாந்து பட்டதாரி, அமெரிக்கா பட்டதாரி என்று விளங்குவதுபோல, சிந்திரி பட்டதாரி என்று இங்கு கல்வி பயின்ற மாணவர்களுக்கும் பிற்காலத்தில் மதிப்பளிக்கப்படும் என்று நம்பலாம்.

ஆசியாவிலேயே மிகப் பெரியதும், இந்தியாவின் கற்பக தருவாகவும் விளங்கும் சிந்திரி தொழிற்சாலையைப் பற்றி நாம் ஒவ்வொருவரும் பெருமைப்பட வேண்டிய விஷயம். தற்போது சிந்திரி உற்பத்தி செய்யும் மூன்றரை லக்ஷம் டன் உரம் நம் நாட்டின் தேவைக்கு ஏழில் ஒரு பங்குதான். ஆகையால் சிந்திரியைப் போல் தென்னாட்டிலும் ஒரு உர உற்பத்தி சாலையைச் சீக்கிரத்திலேயே நிறுவத் திட்டமிட்டிருக்கின்றனர்.

இவைகளும் இன்னும் நம் நாட்டின் பல பாகங்களிலும் தோன்றிக் கொண்டிருக்கும் தொழிற்சாலைகளும் ஆராய்ச்சி ஸ்தலங்களும் நம் நாட்டிற்கு வெகு சீக்கிரம் சுபிட்சத்தை அளித்து நம் மக்களை உன்னத நிலைக்குக் கொண்டுவரும் என்பதில் ஐயமில்லை. வாழ்க, தொழிலாளர் இந்தியா! ஜெய் பாரத்!

மிகப் பெரிய ரஸாயன உர உற்பத்திச் சாலையான சிந்திரித் தொழிற்சாலையின் தோற்றம்.



# இலட்சியத் தம்பதிகள்

**சரோஜா**

சீதாவும் ராகவனும் கல்யாணம் செய்து கொண்ட புதிது. மணம் என்றால் சாதாரண மணம் அல்ல; காதல் மணம். படித்துப் பட்டம் பெற்றதுடன் உலக ஞானமும் பெற்ற புதுமைப் பெண் சீதா. தொழிலளவில் டாக்டர்தான் என்றாலும் இலக்கியங்களைக் கரைத்துக் குடித்து இலட்சியக் கனவுகள் கண்டவாறு வாழ்ந்து வந்த நவயுவன் ராகவன். அவர்கள் தூயக் காதலைக் கண்டனம் செய்யாது அவர்களுடைய பெற்றோர்கள் உடனே இருவருக்கும் மணம் செய்துவிட்டனர். ராகவனுக்கு வாழ்க்கை சற்று 'சப்'பென்று ஆகி விட்டது. "இவ்வளவு சுலபமாகவா என் இலட்சியக் காதல் நிறைவேற வேண்டும்!" என்று பெருமூச்சு விட்டான் டாக்டர் ராகவன்.

"இங்கே பாருங்கள்" என்றாள் சீதா கனிவு ததும்பும் குரலில் அழைத்தாள்.

ராகவன் கையிலிருந்த புத்தகத்தைக் கீழே வைத்து விட்டு நிமிர்ந்து பார்த்தான்.

"நமது காதல் நிறைவேறியது ஒரு பிரமாதமான காரியம் அல்ல. நமது இல்வாழ்க்கையை மிகச் சிறந்த முறையில் அமைத்துக் கொள்வதில் தான் நமது வெற்றி இருக்கிறது. நமது இலட்சிய வாழ்க்கைக்குத் தேவையான திட்டங்கள் சிலவற்றை வகுத்திருக்கிறேன்" என்றாள் சீதா.

"இலட்சியம் என்றால் அதற்குத் திட்டங்கள் தேவைதான். நான் உன் அபிப்பிராயங்களை எப்பொழுதுமே வரவேற்கிறேன்; — பாராட்டவும் செய்கிறேன். அதில் உனக்கு ஏதாவது சந்தேகம் உண்டா!" என்றான் ராகவன் உற்சாகத்துடன்.

"அப்படியில்லை. சற்றுக் கேளுங்கள்" என்று புன்னகையுடன் ஆரம்பித்தாள் சீதா.

"நாம் மணம் புரிந்துகொண்டு விட்டதால், நம் இருவருடைய தனிப்பட்ட சுதந்திரம் பாதிக்கக் கூடாது அல்லவா!"

"நிச்சயமாக என்றும் பாதிக்கக் கூடாது. உன் வழியே நீ செல்லலாம். எனக்கு உரிய வழியில் நான் செல்லுவேன். ஆனால் அவரவர் அபிப்பிராயத்தை வெளியிடுவதில் இருவருக்குமே சுதந்திரம் உண்டு. பொதுவாக வாழ்க்கையில் நாம் இருவரும் இணைபிரியாத தோழர்கள்."

இதைக் கேட்டதும் சீதாவுடைய முகம் சந்திரனைக் கண்ட அல்லி மலரைப் போல் மலர்ந்தது. ராகவன் சற்று நேரம் அந்த அழகிய முகத்தை ஆர்வத்துடன் நோக்கினான். சீதா மீண்டும் பேச்சை ஆவலோடு தொடர்ந்தாள்:

"நீங்கள் கூறியவை யெல்லாம் உண்மையான வார்த்தைகள். சாதாரணமாக ஒவ்வொருவர் மண வாழ்க்கையில் எழும் அநாகரிகமான தகராறுகள் எல்லாம் நம் வாழ்க்கையில் தலைகாட்டக் கூடாது என்று விரும்புகிறேன். மனைவி கணவனைத் தவிர வேறு ஒருவருடனும் பழகக் கூடாது என்றும், கணவன் மனைவியைத் தவிர வேறு பெண்களைக் கண்ணெடுத்தும் பார்க்கக் கூடாது என்றும் ஒருவருக்கொருவர் சச்சரவு செய்து கொள்கிறார்களே அவற்றிற்கு நாம் விதிவிலக்காக இருக்க வேண்டும். அம்மாதிரி சந்தேகத்துக்கெல்லாம் அடிப்படைக் காரணம் தம்பதிகளிடையே நம்பிக்கையின்மை தான். நம்மிடையே அந்த நம்பிக்கையின்மை என்றும் எழாது என்று நம்புகிறேன்" என்றாள்.

"நான் உன்மீது என்றுமே அந்தமாதிரி கீழ்த்தரமான சந்தேகம் எல்லாம் கொள்ள மாட்டேன். இதை நீ என்றும் நம்பலாம். சீதா! நாம் இலட்சியத் தம்பதிகள் என்பதை மட்டும் மறந்து விடாதே" என்றான் ராகவன் உணர்ச்சியுடன்.

"அது போகட்டும். நான் உதவி ஆசிரியர் வேலைக்கு மனுப் போட்டிருந்தேனே. அதை ஏற்றுக் கொள்ளச் சொல்லி உத்தரவு வந்து விட்டது. நானும் அந்த வேலையை ஒப்புக் கொள்ளலாம் என்று இருக்கிறேன். இதைப் பற்றி உங்கள் அபிப்பிராயம் என்ன!"

"இதில் என் அபிப்பிராயம் என்ன இருக்கிறது? உனக்கு அந்த வேலை பிடித்தமாயிருந்தால் சந்தோஷமாக ஏற்றுக்கொள். ஆனால் இரவு வேலைக்கெல்லாம் ஒப்புக்கொண்டு உடல் நலத்தைக் கெடுத்துக் கொள்ளாதே. அதுதான் மிக முக்கியம். மற்றப்படி உன் முன்னேற்றத்துக்கு நான் என்றுமே தடையாக இருக்க விரும்ப மாட்டேன்" என்று கூறி முடித்தான் ராகவன்.

அதற்குச் சீதா தன் அன்பு ததும்பும் பார்வை ஒன்றால் நன்றியைத் தெரிவித்துக் கொண்டாள். பெருமை பொங்கும் புன்னகையுடன் ராகவன் அதை ஏற்றுக் கொண்டான்.

* * *

சில வாரங்கள் கழிந்தன. சீதா சமையலுக்கு உப்புப் போட மறந்துவிட்ட நாட்களில் கூட அவன் அதை உவப்புடன் சாப்பிட்டு வந்தான். சீதா வீட்டுக்கு வெகு நேரம் கழித்து வந்த நாட்களில்கூட அவன் அதைச் சிறிதும் பொருட்படுத்தாதிருந்தும் வந்தான். ஆனால் நாள் செல்லச் செல்ல இருவர் மனத்திலும் அதிருப்தி என்னவோ வளர ஆரம்பித்து விட்டது.

அதன் காரணத்தைக் கண்டுபிடிக்க மனோதத்துவ நூல்களைப் படிப்பதில் ஆழ்ந்தான் ராகவன். தர்க்க சாஸ்திரத்தைப் புரட்டினாள் சீதா. அவைகளில் இவர்கள் பிரச்னைகளைத் தீர்க்கும் உபாயம் என்னவோ தென்படவில்லை. ஆயினும் அவரவர் சுயமதிப்பையோ, இலட்சியங்களையோ காற்றில் பறக்கவிட்ட தம் தோல்வியை ஒப்புக்கொள்ள சீதாவும் முன்வரவில்லை; ராகவனும் முன்வரவில்லை.

பிரபல பத்திரிகை ஒன்றுக்கு உதவி ஆசிரியராக அமர்ந்த சீதாவுக்கு நாளுக்கு நாள் பொறுப்பும் வேலையும் வளர்ந்து வந்தன. டாக்டர் ராகவனுக்கும் பொறுப்பு அதிகமாகத்தான் இருந்தது. வீட்டு வேலைகளையும் வெளி வேலைகளையும் ஒருங்கே கவனிக்க இயலவில்லை என்பதைத் தெரிவித்தாள் சீதா. தாமதமின்றிச் சமையல்காரன் ஒருவன் அமர்த்தப்பட்டான். வருமானம் தேவைக்கு மிகுதியாகவே இருந்தது. அவர்கள் இலட்சிய வாழ்க்கைக்கு இடைஞ்சலாகப் பொருளாதாரச் சிக்கல் ஒன்றும் ஏற்படவில்லை.

காலை பத்து மணியிலிருந்து மாலை ஐந்துமணி வரை சீதாவுக்கு அவள் காரியாலயத்தில் அலுவல்கள் இருந்தன. காலை ஒன்பது மணியிலிருந்து மாலை ஒன்பது மணி வரை ராகவனுக்கு அவனுடைய ஆஸ்பத்திரியில் வேலைகள் சரியாக இருந்தன. காலையிலும், இரவிலும் உணவு நேரத்திலும்தான் இருவரும் சந்திப்பது வழக்கம்.

"என்ன வேலை வேண்டியிருக்கிறது. காலையிலிருந்து மாலை வரை ஓய்வு ஒழிவில்லாமல்" என்று ஒரு நாள் அலுத்துக் கொண்டாள் சீதா.

"முன்னேறியுள்ள நாட்டினர் எல்லாம் இப்படித்தான் வாழ்க்கையை நடத்துகின்றனர்" என்று அவன் சமாதானம் கூறினான். யோசித்துப் பார்த்ததில் அவளுக்கும் அது சரியென்றே பட்டது. பிறகு அவன் கருத்தை அவளும் ஆமோதித்தாள்.

இன்னமும் அபிப்பிராய பேதத்துக்கு என்ன இருக்கிறது என்று நினைக்கிறீர்களா! அதுதான் வேடிக்கை. பத்திரிகாலயத்துக்கு வரும் கட்டுரை, கதைகள் இவற்றைப் பரிசீலனை செய்து தேர்ந்தெடுப்பது சீதாவுடைய கடமைகளுள் ஒன்று. குலோத்துங்கன் என்ற எழுத்தாளர் ஒருவருடைய கதைகளும், கட்டுரைகளும், குண்டு குண்டான அவன் எழுத்துக்களும் அவளை வெகுவாகக் கவர்ந்தன. அவனை நேரிலேயே ஒருநாள் சீதா தற்செயலாக சந்தித்தாள்.

அவனுடைய பெயரைப் போலவே அவன் கதைகளைப் போலவே அவனும் அழகாகக் காணப்பட்டான். சீதாவுக்கு எப்பொழுதுமே எழுத்தாளர்கள்மீது காரணமற்ற ஒரு பைத்தியம் உண்டு. அதனால் குலோத்துங்கனை ஒருநாள் வீட்டுக்கு அழைத்து வந்து தன் கணவர் டாக்டர் ராகவனுக்கு அறிமுகப்படுத்தி வைத்தாள். அது முதல் குலோத்துங்கனும் அந்த இலட்சியத் தம்பதிகளுக்கு நண்பனானான்.

ராகவன் அந்த நட்பை சில நாட்கள் வரவேற்றான். சில வாரங்கள் வரை அந்த நட்பை ஓரளவு ரசித்தான். சில மாதங்கள் சென்றதும் அந்த நட்பை அவனால் விரும்ப முடியாமல் போய் விட்டது. காரணம் குலோத்துங்கன் தினம் ஒரு முறை அவர்கள் இல்லத்துக்கு வந்து போய்க் கொண்டிருந்ததுதான்.

இதே சமயத்தில் ராகவனுடைய ஆஸ்பத்திரியில் வேலை பழகிக் கொள்ளுவதற்காக எம். பி. பி. எஸ். பட்டம் பெற்ற கமலம் வந்தாள். அவள் அந்த வருஷத்தில்தான் வைத்தியத் தொழிலில் முதன்மையாகப் பட்டம் பெற்றவள். புதிதாகப் படித்து வந்த மாணவியாக இருந்தாலும் அவள் காட்டிய திறமை ராகவனைத் திகைக்க வைத்து விட்டது. சீதாவும் அவளைப்போல் தன் வேலைக்கு உதவி செய்யக் கூடியவளாக இல்லையே என்று அவனுக்குச் சில சமயங்களில் தோன்றும்.

"ஒரு நாள் நீங்கள் என் வீட்டுக்கு வரவேண்டும்" என்று கமலத்தை அழைத்தான் ராகவன். சற்று யோசனை செய்த கமலம், "ஆகட்டும்" என்று தலையை அசைத்து வைத்தாள். அதிலிருந்து கமலம் இலட்சிய வாழ்க்கைக்கு எடுத்துக் காட்டாக வாழ விரும்பிய இந்த இலட்சியத் தம்பதிகளின் குடும்ப நண்பராக மாறினாள்.

சீதாவுக்கு வாழ்க்கை ரஸமற்றதாக மாறி வந்தது. ராகவன் கமலத்தை நட்பு என்ற உறவுக்கும் அப்பால் ஒரு தனி ஸ்தானத்தில் அமர்த்தி வைத்திருப்பதாகச் சீதாவுக்குப் பட்டது. அதிலும் தான் உற்சாகமற்று இருக்கும்பொழுது அவருக்கு மட்டும் அவ்வளவு குதூகலம் ஏன் ஏற்பட வேண்டும் என்று நினைத்தாள். உடனே அதன் காரணத்தையும் ஆராய ஆரம்பித்தாள் சீதா.

* * *

ஒரு நாள் ராகவன் வழக்கத்துக்குச் சற்று முன்னதாகவே வீட்டுக்கு வந்தான். சீதாவை அழைத்துக் கொண்டு சினிமாவுக்குப் போகும் உத்தேசத்துடன்தான் வந்தான். வீட்டில் மாடி உள்பட எல்லா அறைகளிலும் விளக்கு எரிந்து கொண்டிருந்தது. சீதா மட்டும் வெளி ஹாலில் உட்கார்ந்து கொண்டு ஏதோ தர்க்க சாஸ்திர புத்தகம் ஒன்றைப் படித்துக் கொண்டிருந்தாள். எழுத்தாளர் குலோத்துங்கன் மேஜையருகே உட்கார்ந்து ஏதோ எழுதிக் கொண்டிருந்தான்.

இதைப் பார்த்த ராகவனுக்குக் கோபம் உச்ச நிலையை அடைந்தது. அதை வெளியே காட்டிக் கொள்ளாமல் சீதா பக்கம் திரும்பி, "இன்று






மனைவி:—டிரஸ் பண்ணிக் கொண்டாச்சா என்று எத்தனை தடவை கேட்கிறீர்கள். நான்தான் ஐந்து நிமிஷத்திலே வந்து விடுகிறேன் என்று ஒரு மணியாகச் சொல்லிக்கொண்டு இருக்கிறேனே! காதில் விழவில்லையா?

---

சூரியன் டாக்கீஸில் 'குடும்பம்' என்று ஒரு புதுப் படம் வந்திருக்கிறது. இரவு ஒன்பதரை மணி சினிமாவுக்குப் போகலாம். சீக்கிரமாகத் தயார் செய்து கொள்" என்றான்.

"சினிமாவா! ஏற்கெனவே எனக்குத் தலையை வலிக்கிறது. ஒன்றுக்கும் உதவாத இந்தத் தமிழ்ப் படங்களுக்கு வேறு போய்த் தலை வலியை அதிகப்படுத்திக் கொள்ள வேண்டுமா!" என்றாள் சீதா அசுவாரசியமாக. அவன் பதில் ஒன்றும் கூறாமல் அந்த இடத்தை விட்டு அகன்றான்.

அன்றைய சம்பவம் அத்துடன் முடிந்தது.

மறுநாள் ராகவன் வீட்டுக்கு வரும்பொழுது கமலத்தையும் கூடவே அழைத்துக் கொண்டு வந்தான். மணியோ எட்டு. ஆத்திரத்துடன் அவன் முகத்தை நோக்கினாள் சீதா. அவன் அதைக் கவனித்ததாகவே தெரியவில்லை. அன்று வந்திருந்த நோயாளியின் விசித்திரமான வியாதியைப் பற்றி கமலத்துடன் தீவிரமாக விவாதித்துக் கொண்டிருந்தான். "ஒன்பது மணியாகி விட்டதே. இருவரும் சாப்பிட வருகிறீர்களா!" என்று மனக் கசப்போடு அழைத்தாள் சீதா.

கமலம் ராகவனுடைய முகத்தைப் பார்த்தான். "சற்று நேரம் கழித்து வருகிறோம்" என்று கமலத்துக்கும் சேர்த்துப் பதிலளித்தான் ராகவன். அவனை எரித்து விடுவது போலப் பார்த்துவிட்டு உள்ளே சென்றாள் சீதா.

மணி பத்தடித்தது. இருவரும் இருந்த இடத்தை விட்டு எழுந்திருப்பதாகத் தோன்றவில்லை. சற்று நேரம் கழித்துச் சமையல்காரனை பரிமாறச் சொல்லிச் சாப்பிட்டு விட்டு டிரைவரைக் கூப்பிட்டுக் காரை எடுக்கச் சொன்னான் ராகவன். காரில் தன் அருகில் கமலத்தை உட்கார வைத்துக் கொண்டு அவனை வீட்டில் விட்டு வருவதற்காகக் கிளம்பினான். சீதா ஒன்றும் பேசவில்லை. அவன் திரும்பி வந்ததும் இந்த விஷயங்களுக்கெல்லாம் ஒரு முடிவு கட்டுவது என்று தீர்மானித்து மாடி வராந்தாவில் போய் உட்கார்ந்திருந்தாள்.

டாக்டர் ராகவனின் கார் ஹாரன் சத்தமும், அதைத் தொடர்ந்து அவன் மாடிப்படி ஏறும் பூட்ஸ் காலின் சத்தமும் தெளிவாக அவளுக்குக் கேட்டது. இருளில்கூட சீதா அங்கு உட்கார்ந்திருந்ததை அவன் கவனிக்கத் தவறவில்லை.

"இங்கே பாருங்கள்" என்றாள் சீதா.

வறட்சியாக அவளை நோக்கினான் ராகவன்.

"நாம் எதிர்பார்த்த அளவுக்கு நமது இலட்சிய வாழ்க்கையில் நிம்மதியோ சந்தோஷமோ இருக்கிறது என்று உங்களுக்குத் தோன்றுகிறதா!"

"அதுதான் என்றைக்கோ இல்லையென்று தெரிந்து விட்டதே" என்றான் ராகவன்.

"இதற்குப் பொறுப்பு நான்தானா!"

"உன் மீது குற்றம் சாட்ட நான் யார்!"

"இதெல்லாம் வேண்டாம். உண்மையைச் சொல்லுங்கள். என்னைக் கண்டால் உங்களுக்குப் பிடிக்கவில்லை; அப்படித்தானே!"

"அப்படியேதான் வைத்துக் கொள்ளேன்!"

"போகட்டும், அதற்குக் காரணமாவது கூறுங்கள்" என்று ஏக்கத்துடன் கேட்டாள்.

"அவசியம் கூறவேண்டுமா! அப்படியானால் கூறுகிறேன். உன் பேச்சு, உன் நடவடிக்கை ஒன்றும் எனக்குப் பிடிக்கவில்லை" என்றான்.

"நீங்கள் இப்படிப் பேசுவதற்குக் காரணம் அந்த எழுத்தாளர் குலோத்துங்கன் தானே!"

"உனக்கு அது தெரிந்துதான் ஆக வேண்டுமானால் சொல்லுகிறேன். ஆமாம்."

"நீங்கள் கமலத்திடம் கொண்டாடும் நட்பைப் பற்றி நான் இப்படிப் பேசினால் நீங்கள் சும்மாயிருப்பீர்களா! சற்று யோசித்துப் பாருங்கள்" என்றாள் சீதா கண்களில் நீர் துளிக்க.

அவன் மறுமொழி ஒன்றும் கூறவில்லை. ஏதோ சிந்தித்துக் கொண்டிருந்தான். பிறகு, "இந்த விவகாரத்தில் கமலத்தை இழுப்பானேன்!" என்றான் சற்று ஏளனமாக.

"சரி, நான் கமலத்தைப் பற்றி ஒன்றும் கூறவில்லை. நம்மைப் பற்றி மட்டும் பேசுகிறேன். உங்களுக்கு இஷ்டமில்லாவிட்டால் நான் வேலையை ராஜிநாமா செய்யக் கூடத் தயார். இதை நீங்கள் முன்பே தெரிவித்திருக்கலாம். இப்பொழுதும் சொல்லுகிறேன். நான் உங்கள் சுதந்திரத்தில் குறுக்கிட விரும்பவில்லை. ஆனால்......" மேலே பேச முடியாது விம்மினாள்.

பிறகு ஏதோ நினைத்துக் கொண்டதுபோல் "குலோத்துங்கனை இங்கு வரவேண்டாமென்று சொல்லி இரண்டு நாட்களாகிறது" என்றாள் சீதா கண்ணீரைத் துடைத்துக் கொண்டே.

அவள் கண்ணீரைக் கண்டும் மௌனம் சாதிக்க அவனால் முடியவில்லை. "சரி, என்றோ போனதையெல்லாம் நினைத்துக் கொண்டு இப்பொழுது மனத்தைப் புண்படுத்திக் கொள்ளாதே. அதையெல்லாம் மறந்துவிடு" என்றான் ராகவன்.

ஏதோ ஆறுதலைப் பெற்றவள்போல் பெருமூச்சு விட்டாள் சீதா. சற்று நேரத்துக்கெல்லாம் அவளை நோக்கி "நாம் நமது இலட்சியத்திலிருந்து தவறி விட்டோம் அல்லவா!" என்றான் ராகவன்.

அவனுடைய அன்பின் அணைப்பிலே அல்லிக் கொடிபோல துவண்டு கிடந்த சீதா 'இருந்தாலும் நாம் இலட்சியத் தம்பதிகள்தான்' என்று சொல்வதுபோல அவனைப் பார்த்துக் கொண்டாள்.

# ஆரோக்கிய ரகசியம்

**வி. என். குமாரசாமி**

## 15. ஆஸ்தான கவிஞரின் அனுபவம்

நமது நாடு புண்ணிய பூமி. இதற்குப் பல சான்றுகள் இருக்கின்றன. அவைகளில் பல சரித்திரங்களின் வாயிலாகக் கேட்டிருக்கிறோம். ஆனால் நிதர்சனமாக நமது கண் முன்பே பல புண்ணிய ஆன்மாக்களுடன் வாழும் பாக்யம் நாம் அடைந்திருக்கிறோம். அவர்களில் மிக முக்கியமான புண்ணியவான் மகாத்மா காந்தி அடிகளாவர். அவர் வாழ்ந்த நாட்களில் நாமும் வாழ்ந்து, அவருடைய உபதேசங்களையும் கேட்டு வந்திருக்கிறோம். அவர் நம்மை விட்டுப் பிரிந்தாலும் அவர் நமக்கு உணர்த்திய அறவழிகள் உலகம் உள்ள மட்டும் அழியாதது. அவர் அரசியல் துறையிலே அதிக பற்றுதல் உள்ளவராக இருந்தாலும், அவர் வாழ்க்கையில் புகுந்து ஆராயாத விஷயமே இல்லை. உணவில் ஆகட்டும், உடையிலாகட்டும், இல்லறத்திலாகட்டும், துறவறத்திலாகட்டும், நோய்களைப் பற்றியாகட்டும், ஆரோக்கியத்தைப் பற்றியாகட்டும் எல்லாவற்றையும் அலசி ஆராய்ந்து அவர் தம் முடிவைத் தந்திருக்கிறார். அன்னாரின் வழிவந்த நமது ஆஸ்தான கவிஞர் நாமக்கல் ஸ்ரீ வே. ராமலிங்கம் பிள்ளை அவர்கள் மகாத்மா காந்தியடிகளின் அடிச்சுவட்டைப் பின்பற்றி நமது நாட்டில் நம்முடனே வாழ்ந்து வருகிறார்.



கவிஞர் சிரஸாசனம் செய்கிறார்.

இப்பேர்ப்பட்ட கவிகள் நமது நாட்டிற்குப் பொக்கிஷம் போன்றவர்கள். இவர்களால் நமது நாடு உயர்வடைகிறது. நாட்டின் கலை உயர்வடைகிறது. அதனால் மனித இனமே உயர்வடைகிறது. இவர்கள் சாதாரண மக்களைவிட ஆயிரம் பல்லாயிரமடங்கு சிரேஷ்டமானவர்கள். அப்பேர்ப்பட்டவர்கள் நெடுநாள் ஆரோக்கியமுடன் வாழ்வதால் நாட்டிற்கு என்றென்றும் அவர்கள் சேவை கிடைத்துக் கொண்டிருக்கும்.

நான் ஆஸ்தான கவிஞரை சுமார் இருபது ஆண்டுகளாக அறிவேன். அவருடைய எளிய காவியங்களின்மேல் எனக்கு அசாத்தியப் பிரேமை. அவைகளைப் படிக்கும் போதெல்லாம் அவர்மேல் எனக்கு இன்னமும் பாசம் அதிகப்படும். அவருக்குச் சில நோய்களிருப்பது எனக்கு நெடுநாளாகத் தெரியும். அவரைச் சந்திக்கும் பொழுதெல்லாம் ''ஆசனம் பழகுங்கள்; சரியாகிவிடும்'' என்பேன். அவரும் ''ஆகட்டும், ஆகட்டும்'' என்று சொல்லிக்கொண்டு வந்தார். கடைசியில் இப்படியெல்லாம் செய்தால் இவர்கள் ஆசனம் செய்யமாட்டார்களென்று, சுமார் இரண்டு ஆண்டுகளுக்குமுன் நான் அவரை என் வீட்டிலேயே வந்து தங்கும்படி செய்து விட்டேன். அவர்கள் சிறு வயதில் பல தேகப் பயிற்சிகள் செய்து பழக்கமானவர்களானதினால் சுலபமாக நான் சொல்லித் தந்த ஆசனங்களைக் கற்றுக் கொண்டார்கள்.

அவருக்குக் கை சரியாய் எழுதவராது; நடுங்கும். பேனாவைச் சரியாய்ப் பிடிக்க வராது. இடுப்புக்குக் கீழ் திமிர் பிடித்தாற்போல் கீழே போகப் போக அதிகம் உணர்ச்சியற்று இருந்தது. இதைத் திமிர்வாத மென்பர். இவைகள் பொதுவாய் நரம்புகளில் சரியான ரத்தோட்டம் இல்லாமையினாலும், பிராணவாயு சஞ்சாரம் சரிவர இல்லாமையினாலும் நரம்புகளின் இழைகள் பலவீனப்பட்டுப் போவதினாலும் உண்டாகின்றன. இதற்குப் புஜங்காசனம், சலபாசனம், தனுராசனம், பஸ்சிமோத்தானாசனம், சர்வாங்காசனம், மத்ஸ்யாசனம், சிரசாசனம், சாந்தியாசனம், நாடிசுத்தி இவைகளை அவருக்குச் சொல்லித் தந்தேன்.

கவிஞரே எழுதிய கடிதத்தைக் கீழே கொடுத்திருக்கிறேன். படித்துப் பாருங்கள். அவர்களுக்குக் கை நன்றாக எழுத வந்து விட்டது; தினசரி மணிக்கணக்காய் இப்பொழுது எழுதுகிறார். ஆனால் இடுப்புக்குக் கீழ் மட்டும் பூர்ண குணம் ஆகவில்லை. சிறிதுதான் ஆகியிருக்கிறது என்கிறார். நான் சொன்னபடி ஆசனங்களை இன்னும் அதிக நேரம் பழகியும் உணவுப் பத்தியமும் இருந்து வந்தால் பூரண குணம் கிடைக்குமென்று நம்புகிறேன்.

அதுவரைக்கும் என் வார்த்தையில் நம்பிக்கை வைத்து அவர்கள் ஆசனம் செய்ததே நம் பாக்கியமென்று நினைக்க வேண்டும். மற்றவர்களைப் போலச் செய்கிறேன் என்று சொல்லி ஏமாற்றியிருந்தால் நாம் அவருடைய புதிய குறள் உரையை எதிர் பார்த்திருக்க முடியாதல்லவா! கைகள் தானே கவிகளுக்குக் கருவி!

அவருடைய கைகள் குணமாயிற்று என்று நான் அறிந்ததும் எனக்குண்டான மகிழ்ச்

சிக்கு எல்லையே இல்லை. எனக்கே இம்மாதிரி ஏதாகிலும் குறையிருந்து அது குணமாகி யிருந்தாலும் அவ்வளவு சந்தோஷம் அடைந்திருக்கமாட்டேன். தேசியக் கவி, அதிலும் காந்தியக் கவி, நமது கவிஞருக்குக் கைகண்டமாகிவிட்டது என்றால் அவ்விஷயம் என் வரைக்கும் இருப்பது சரியல்ல; எல்லோரும் அறிந்து மகிழட்டும்; ஆசனம் பழகும் லக்ஷக்கணக்கான அன்பர்களும் கேட்டுச் சந்தோஷமடையட்டுமே, அன்பர்கள் யாராவது ஆசனத்தைச் செய்யாமல் இத்தனை நாள் புறக்கணித்துப் பாராமுகமாய் இருந்திருந்தால் இதை அறிந்தாவது, அவர்கள் ஆசனம் துவக்கட்டும் என்ற நோக்கத்துடனேயே கவிஞர் எழுதிய கடிதத்தை வெளியிட விரும்பினேன். நம் ஆஸ்தான கவிஞரின் கடிதத்தைப் படித்துப் பாருங்கள்.

"என் இளம்பிராயத்தில் நான் இயற்கையாகவே உடல் வளமும் ஆரோக்கியமும் உள்ளவனாகவே வளர்ந்தவன். என்னுடன் வயதில் ஒத்த எல்லாச் சிறுவர்களிலும் நோயின்மையும் செழிப்பும் களிப்பும் மிகுந்தவனாகவே இருந்து வந்தேன். பள்ளிப் பருவம் ஆரம்பத்திலிருந்து ஓடியாடும் விளையாட்டுக்களிலும் தேகப் பயிற்சிகளிலும் சிறந்து விளங்கினேன்.

என்னுடைய பதினெட்டாம் வயதுக்குப் பின் இந்த விளையாட்டுகளோடு வீட்டில் தண்டால், பஸ்கி, குஸ்தி, முதலான பயிற்சிகளும் செய்வேன். உண்மையில் மிகவும் வியக்கத் தக்கதாக என் மார்பு விரிந்து ஒரு வருஷம் முடிவதற்குள் என் மார்பின் அளவில் மூன்று அங்குலம் அதிகப்பட்டது. கை முண்டாக்கள் திரண்டு கைமடங்குச் சதைகள் உருண்டு என்னைக் கவர்ந்தன.

இப்படியாக என் 25-வது வயது வரை அந்த சாண்டோ பயிற்சியை விடாது செய்து, பின் சில வருஷங்கள் விட்டுவிட்டுச் செய்து மூப்பதாவது வயதுக்குள் விட்டே போயிற்று. அதன் பிறகு முறையான தேகப் பயிற்சிக்கே அவகாசமில்லாத வாழ்க்கையாகப் போய் விட்டது. என்றாலும் ஆரோக்கியத்தில் குறைவில்லாமலிருந்தேன்.

1932-ம் ஆண்டின் ஆரம்பத்தில் நான் மகாத்மா காந்தியின் சத்யாக் கிரகத்தில் ஈடுபட்டு ஒரு வருட சிறைவாச தண்டனை யடைந்தேன். சிறையில் 'பி' வகுப்பில்தான் இருந்தேன். இருந்தாலும் என் தேகபலம் கொஞ்சங் கொஞ்சமாக மூன்று மாதங்களுக்குள் மிகவும் குறைந்து விட்டது.

சிறையில் நோயாளியாகவே இருந்தேன். 145 பவுண்டு எடையுடன் சிறைக்குள் போன நான் 115 பவுண்டு எடையுடன் வெளியில் வந்தேன். என் தேகம் சற்றுத் தெளிவடைய சுமார் நான்கு ஆண்டுகள் ஆயின. எனினும் அதன்பிறகு அடிக்கடி நோயும் நொடியுமாகத்தான் இருந்தேன்.

1946-வது வருஷத்தில் என் வலது உள்ளங் காலில் ஒருவித மத மதப்பு உண்டாயிற்று. அது சிறுகச் சிறுகப் பரவி இடுப்பு வரையிலும் வந்து விட்டது. அதற்குப் பலவித பஸ்மங்களும் லேஹ்யங்களும் மருந்துகளும் உட்கொண்டேன். ஆனால் அது தீராமற் போனதோடு இடது காலுக்கும் வந்துவிட்டது. மேலும் வைத்தியம் நடந்தது. சென்னை ஜெனரல் ஆஸ்பத்திரியில் நிபுணர்கள் பலவித பரிசோதனைகள் செய்து மருந்தெழுதிக் கொடுத்தார்கள். அந்த மருந்துகளை நெடுநாள் உட்கொண்டேன். வியாதி சொஸ்தமாவது போல் அப்போதைக்குத் தோன்றினதேயன்றிச் சுகமடையவில்லை. மேலும் அந்த மத மதப்பு என்



இதோ! சர்வாங்காசனம் பழகுகிறார்!

வலது கைக்கும் வந்துவிட்டது. என் எழுத்து ஓட்டத்துக்கும் இடையூறு நேர்ந்தது.

பிறகு ஆயுர்வேத முறைப்படி மலையாள வைத்தியரைக் கொண்டு "நவரக்கிழி" நடந்தது. அது உடனே கொஞ்சம் பலனளித்தது. ஆனாலும் அந்த பலன் நெடுநாள் நீடித்திருக்கவில்லை. ஒரு வருஷத்துக்குள் மீண்டும் பழைய நிலைமையே ஏற்பட்டுக் கால்கள் நடப்பதற்கு முடியாமல் தள்ளாடத் தலைப்பட்டன. கைவிரல்களும் பேனாவை அழுத்திப் பிடிக்க முடியாமல் அசந்தன. மேலும் பலவித புதுமருந்துகளை உட்கொண்டேன். சில மருந்துகள் தற்காலிக பலன்களைத் தந்தன.

இப்படியிருக்கும் போதுதான் 1949-ம் வருஷக் கடைசியில் நான் சென்னைக்குச் சென்று ஒரு நண்பர் வீட்டில் தங்கியிருந்தேன். நான் வந்திருப்பதை அறிந்த என் ஆப்த நண்பர்களான குமாரசாமி தம்பதிகள் என்னை அவர்கள் வீட்டுக்கு அழைத்துச் சென்றார்கள்.

மறுநாள் அதிகாலையில் அவர்கள் இருவரும் நான் படுத்திருந்த அறைக்கு வந்து 'இன்றைக்கு நீங்கள் ஆசனப் பயிற்சி ஆரம்பம் செய்யுங்கள்' என்றார்கள். வழியில்லாமல் கட்டுப் பட்டேன்.

சுமார் பதினைந்து நாட்கள் என்னை அங்கேயே இருக்கச் செய்து ஆசனப் பயிற்சியோடு அருமையான உணவுச் சத்துக்கள் உள்ள அறுசுவை

உண்டிகளும் ஊட்டி உபசரித்தார்கள். சுமார் பதினைந்து நாட்களுக்குப் பிறகு அவர்கள் இருவரும் என்னை ஊருக்கு வழியனுப்பும் போது 'ஆசனப் பயிற்சியை விட்டு விடாமல் தினந்தோறும் செய்து வாருங்கள்' என்று பல முறை சொல்லி வற்புறுத்தினார்கள்.

அது முதல் நான் தினந் தவறாமல் ஆசனங்கள் செய்கிறேன். ஒரு நாள் தவறி விட்டாலும் என்னையறியாமல் என் மனம் வருந்துகிறது. இப்போது என் கை நடுக்கம் முற்றிலும் நின்று விட்டது. பேனாவைப் பிடிக்க விரல்கள் முன் போல் பிணங்குவதில்லை. ஆனால் கால்களின் தளர்ச்சியில் மட்டும் வெகு சிறு அளவு குணம் தான் ஏற்பட்டிருக்கிறது. இடுப்புக்குமேல் மிகவும் நலமுற்றிருக்கிறேன். பசி, தாகம், தூக்கம் முதலியவற்றில் குறைவில்லை.

இப்போது என் நித்திய வாழ்க்கையைக் கீழ்க்கண்ட முறையில் நடத்தி வருகிறேன்.

விடியற் காலம் ஐந்து மணிக்கு விழிக்கிறேன். ஆறு மணி வரை எழுதுவதோ படிப்பதோ செய்கிறேன். ஆறு மணிக்கு மேல் வீட்டு முற்றத்தில் சுற்றிச்சுற்றி நடை போடுகிறேன். பின் விசர்ஜனங்களை முடித்துக்கொண்டு "உட்டியாண", "நௌலி" முதலிய ஆசனங்களை மட்டும் செய்கிறேன் அதற்குப் பிறகு நீராடி விட்டுப் பிராணயாமம் ஐந்து நிமிஷங்கள் செய்த பின்னர்தான் மேலே என் காரியங்களைக் கவனிக்கிறேன்.

மாலை ஆறு மணிக்கு மேல் ஒரு மணி நேரத்துக்குக் குறையாமல் ஆசனங்கள் செய்கிறேன். மற்ற ஆசனங்களில் மாறுதல் இருந்தாலும் சர்வாங்காசனமும் சிரசாசனமும் தினமும் செய்கிறேன். சர்வாங்காசனம் சுமார் 10 நிமிஷம் முதல் 15 நிமிஷம் வரையிலும், அதே மாதிரி சிரசாசனமும். எனக்கு வயதின் காரணமாகத் தளர்ச்சி இருந்தாலும் எனக்கு நோய் நொடிகள் இல்லை.

62 வயதாகிவிட்ட நான் பல ஆசைகளை நாடக்கூடாதுதான். இருபது ஆண்டுகளாக அரும்பாடுபட்டு ஆராய்ந்து எழுதி முடித்திருக்கும் மிகவும் புதுமையான "திருக்குறள் புது உரை" விரைவில் வெளியாகும். அதைத் தமிழுலகம் வரவேற்பதைக் காண வேண்டுமென்றும் இன்னும் வேறு சில தமிழ் இலக்கியத் தொண்டுகளைச் செய்து முடிக்க வேண்டும் என்றும் ஆசை அதிகம் இருக்கிறது. அதற்கு ஆரோக்கியம் வேண்டும் அல்லவா! அந்த ஆரோக்கியம் இந்த ஆசனப் பழக்கத்தால்தான் எனக்குக் கிடைத்தது. அதற்காக ஸ்ரீ வி. என். குமாரசாமி தம்பதிகளை வாழ்த்துகிறேன்......"

[illegible]ரின் கடிதத்தைப் படித்த பிறகாவது வாசக நேயர்கள் விடாமல் ஆசனங்களைப் பழகி வருவார்கள் என்று நம்புகிறேன்.

ஆசனம் பழகும் அன்பர்களிடமிருந்து ஒவ்வொரு நாளும் பலப்பல விதமான கேள்விகள் கேட்டுக் கடிதங்கள் வந்து குவிந்த வண்ணம் இருக்கின்றன. அன்பர்களை யெல்லாம் மிகத் தாழ்மையுடன் கேட்டுக் கொள்கிறேன். பல நாள் வியாதி ஒரே நாளில் தீர்ந்து விடாது. வந்த வியாதியையும் போக்க வேண்டும்; உடலும் ஆரோக்கியமாக இருக்க வேண்டும். அதற்கு ஒவ்வொருவரும் சற்றுப் பொறுமையைக் கடைப்பிடிக்க வேண்டும். தன்னம்பிக்கையும் விடா முயற்சியும் அவசியம் வேண்டும்.

பசிக்கு எப்படிச் சாப்பிடுகிறோமோ அதுபோல ஆரோக்கியத்துக்கு ஆசனப் பயிற்சி மிகவும் அவசியம். ஒவ்வொரு நாளும் விடாமல் ஆசனங்களைப் பழகிவந்தால் நிச்சயம் குணம் உண்டு. (தொடரும்)

# விஜயத்தின் அன்பு

ஆர். எஸ். ஞானம்பாள்

"விஜயா! நீ காலத்தை அனுசரித்தாவது போகணும். அவன் உத்தியோகம் அந்தஸ்து ஒன்றையும் கவனிக்காமல் பிடிவாதம் பிடிப்பதில் அர்த்தமே இல்லை" என்றார் டாக்டர் கோபாலன்.

"போங்க அண்ணா! நீங்கள் எப்பொழுதும் அவர் பக்கம்தான்" என்றாள் விஜயா.

"நான் யார் பக்கமும் பேசவில்லை. பொதுவாகத்தான் சொல்லுகிறேன். உன் எதிரில் உனக்குப் பிடிக்காததைச் செய்வதில்லை என்றுதான் சொல்லுகிறானே! பொய் சொல்லாமல் நேர்மையாகத் தன் குற்றத்தை ஒப்புக் கொண்டு எழுதுவதாலேயே ஹரன் நேர்மையானவன் என்று தெரியவில்லையா!" என்று வாதாடினார் கோபாலன்.

"இது ரொம்ப அழகா யிருக்கிறதே! அப்பொழுது காணாத இடத்தில் என்ன அக்கிரமம் வேணும் என்றாலும் பண்ணலாமா!"

"விஜயா! அப்புறம் எனக்குக் கோபம் வரும். அவன் அப்படி என்ன அக்கிரமம் பண்ணிவிட்டான். ராணுவத்திலே பெரிய ஆபீஸர். ஆயிரம் ரூபாய் சம்பளம் வாங்குகிறான். இந்த அற்ப விஷயத்தில் அவனை மனம் நோக அடிக்கலாமா! அசடு மாதிரி பிடிவாதம் பிடிக்காதே..."

விஜயம் மௌனமா யிருந்தாள்.

"விஜயம்! எனக்குக் கொஞ்சம் வெளியே போகணும். நான் வர நேரமானாலும், ஹரன் வந்தால் ஏதாவது உளறி வைக்காதே!" என்று சொல்லிக் கொண்டே கோபாலன் சென்று விட்டார். விஜயம் சோபாவில் படுத்தாள்.

* * *

விஜயம் தன் கணவருடைய செயலை நினைத்து வருந்தினாள். ஹரன் சிகரெட் பிடிப்பது விஜயத்துக்குக் கட்டோடு பிடிக்கவில்லை. முதலிலேயே தெரிந்திருந்தால் கல்யாணத்துக்குக் கூட இசைந்திருக்க மாட்டாள். தன் அண்ணாவின் ஆஸ்பத்திரிக்குச் சென்று விட்டு வீடு திரும்பும் பொழுது விஜயம் கால் தடுக்கிக் கீழே விழுந்து விட்டாள். பின் தலையில் பலமான அடிபட்டு நினைவு இழந்து கிடந்த அவளை மோட்டார் சைக்கிளில் வந்து கொண்டிருந்த ஒரு ராணுவ ஆபீஸர் எடுத்து ஒரு ஆஸ்பத்திரியில் சேர்த்தார். நினைவு வரும்வரை பக்கத்தில் இருந்து விஜயத்தின் சகோதரன் விலாசத்தைத் தெரிந்து கொண்டு சொல்லிவிட்டு வந்தார் ராணுவ ஆபீஸர். விஜயம் நன்றாகக் குணம் அடையும் வரை தினம் ஒரு தடவை வந்து பார்த்து விட்டுப் போவார். விஜயத்துக்கு ராணுவ ஆபீஸரை மிகவும் பிடித்திருந்தது. அவரும் விஜயத்தை மணந்து கொள்ள ஆசைப்பட்டார்.

விஜயத்தின் அண்ணா கோபாலன் மட்டும் சுலபத்தில் சம்மதிக்கவில்லை. பத்து வயதில் தாய் தந்தையை இழந்த தங்கைக்குத் தானே தாயும் தந்தையுமாக இருந்து அவளை பி. ஏ. வரை படிக்க வைத்தார். மணமாகி ஒரு வருஷத்துக்கெல்லாம் மனைவியைப் பறிகொடுத்த கோபாலன் தங்கைக்காகவே உலகில் வாழ்ந்து வந்தார். ராணுவத்தில் உயர்ந்த அந்தஸ்தில் இருக்கும் ஹரன் ஒழுங்கானவன்தானா என்று அவன் நண்பர்களையும் தெரிந்தவர்களையும் துருவித் துருவிப் பலமுறை விசாரித்தார். பெரிய குடும்பத்தில் பிறந்த ஹரன் அழகிலும் அறிவிலும் குணத்திலும் உயர்ந்தவனாக இருப்பதைத் தெரிந்து கொண்டு கடைசியில்தான் அவர்கள் திருமணத்தை நடத்தினார்.

கல்யாணம் பம்பாயில் நடந்தது. மறுதினமே காஷ்மீருக்குப் புறப்படும்படி உத்தரவு வரவும் ஹரன் புறப்பட்டான். மூன்று மாதங்கள் கழித்துப் பம்பாய்க்கே மாற்றினார்கள். ஹரன் மாதத்துக்கு இரண்டு மூன்று நாட்கள்தான் வீட்டுக்கு வர முடிந்தது. முதல் தடவை வந்த பொழுது விஜயம் ஹரனின் செய்கையைக் கண்டு திடுக்கிட்டாள். ஹரன் ஒரு நாளைக்கு ஒரு டப்பா சிகரெட்டைத் தீர்ப்பதைப் பார்த்ததும் அவள் அடைந்த வருத்தம் கொஞ்ச நஞ்சமில்லை. முகத்தைச் சுளித்தவாறே, "இதென்ன கெட்ட வழக்கம்!" என்று கோபத்துடன் கேட்டாள்.

ஹரன் சிரித்துக் கொண்டு, "விஜயம்! டில்லிக் குளிரிலே இந்த சிகரெட்தான் பெரிய வரப் பிரசாதம்!" என்றான் மிகவும் சாந்தமாக.

"சிகரெட் இல்லாவிட்டால் முடியாதோ!"

"அதெப்படி முடியும்! தினம் ஒரு டின் சிகரெட் ஆகிறதே!"

"ஐயையோ, உடம்பு என்னத்துக்காகும்!"

"ஒன்றும் செய்யாது. கவலைப்படாதே! இங்கே நாம் விருந்தாளிகளுக்கு வெற்றிலைப் பாக்கு, காப்பி உபசாரம் பண்ணுவதுபோலே நாங்கள் ராணுவ முகாமில் ஒருவருக்கொருவர் சிகரெட் உபசாரம் செய்வோம்" என்று சொன்னான் ஹரன்.



டெலிபோனிலிருந்து குரல்:—ஹலோ! நான்தான் வேதாந்தம் பேசுகிறேன்.

உட்கார்ந்திருப்பவர்:—வேதாந்தமா? எங்கே பேசப் போகிறீர்கள்?

மனைவி:—அழகுதான்! கோமளத்தின் மச்சினன் பெயர் வேதாந்தம் என்கிறதை மறந்து விட்டீர்களா?

"போதுமே, கர்மம்! எனக்கு இது பிடிக்கவே இல்லை. நீங்கள் இந்த வழக்கத்தை விட்டு விடுங்கள்" என்று கெஞ்சினாள் விஜயம்.

"இதை விடுவது ரொம்பக் கஷ்டம் விஜயம்! நீ வேண்டுமானால் காப்பியை விட்டுவிடு பார்க்கலாம்!" என்றான் ஹரன்.

"நீங்கள் சிகரெட்டை விட்டு விடுகிறேன் என்று சொல்லுங்கள். நான் காப்பியை விடத் தயார்" என்றாள் விஜயம்.

"சேச்சே! எனக்காக நீ காப்பியை விடவேண்டாம். நான் வேணுமானால் சிகரெட்டை விட்டு விடப் பார்க்கிறேன்!"

"பார்ப்பதாவது! அறவே விட்டுவிட வேணும்" என்று கூறி அவள் சிகரெட் டின்னை எடுத்து ஒளித்து வைத்து விட்டாள்.

மறுநாள் ஹரன் முகாமுக்குப் போய் விட்டான்.

அடுத்த தடவை வந்தபோதும் ஹரன் தன் வழக்கத்தைக் கொஞ்சமும் குறைக்கவில்லை என்பதை அறிந்த விஜயம் ஹரனிடம் சரியாக முகம் கொடுத்தே பேசவில்லை. கோபாலனும், "ஹரன்! விஜயம் சொல்வதும் நியாயம்தானே! தினம் ஒரு டின் தீர்த்தால் இருதயம் என்னத்துக்கு ஆகும். கொஞ்சம் கொஞ்சமாகக் குறைத்துக் கொண்டு விடேன்" என்று வற்புறுத்தவே ஹரன் மிகுந்த கஷ்டத்துடன் அதற்குச் சம்மதித்தான்.

விடுமுறை நாட்கள் முடிந்து ஹரன் ஊருக்குச் செல்லும் பொழுது, "நீங்கள் அங்கே சென்றதும் சிகரெட் பிடிக்கக் கூடாது. அப்படிப் பிடிப்பதாயிருந்தால் நீங்கள் என்னைப் பார்க்க இங்கே வர வேண்டாம்!" என்று சொல்லி வழி அனுப்பினாள்.

ஹரன் பதில் பேசாமல் சென்று விட்டான்.

நாலு நாட்களுக்கு முன்பு ஹரனிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. 'நான் மனமறிந்து பொய் சொல்ல விரும்பவில்லை. இங்கே எவ்வளவு கட்டுப் படுத்தினாலும் சிகரெட் இல்லாமல் முடியவில்லை. ஆனால் அதற்காக நான் கிறிஸ்துமஸ் விடுமுறையில் உன்னைப் பார்க்க வராமல் இருக்கப் போவதில்லை' என்று எழுதியிருந்தான்.

விஜயத்தின் கோபம் எல்லை மீறியது. 'நீங்கள் இங்கே வரவேண்டாம், கிறிஸ்துமஸுக்கு நான் பூனாவுக்குச் செல்லப் போகிறேன்' என்று பதில் எழுதத் தீர்மானித்தாள்.

அப்பொழுது அங்குவந்த கோபாலன், "விஜயம்! ஹரன் வருவதாக எழுதியிருக்கிறான். இரண்டு பேரும் இங்கேயே இருக்கிறீர்களா! பூனாவுக்குப் போகிறீர்களா!" என்று கேட்டதும் விஜயம் தன் தீர்மானத்தைச் சொன்னாள்.

"அவரை வரவேண்டாம் என்று எழுதப் போகிறேன்" என்று விஜயம் சொன்னதும் அவர் திடுக்கிட்டு, "என்னம்மா இது!" என்று கேட்டார்.

"ஆமாம் அண்ணா! அவர் தன் கெட்ட வழக்கத்தை நிறுத்தும் வரை அவர் முகத்தையே நான் பார்க்கப் போவதில்லை" என்றாள் விஜயம். இதைத் தொடர்ந்துதான் அவர்களிருவருக்கும் ஆரம்பத்தில் கூறிய சம்பாஷணைகள் நடந்தன.

* * *

"விஜயம், இந்த நேரத்தில் கூடத் தூக்கமா என்ன! அண்ணா எங்கே!"

"யார் நீங்களா! இன்றைக்கே எப்படி வந்தீர்கள்! இதென்ன கட்டு கையில்!"

"நெருப்பு சுட்டு விட்டது...."

"ஐயையோ! எப்படிச் சுட்டது! ரொம்ப அதிகமாகச் சுட்டு விட்டதா!"

"அதெல்லாம் ஒன்றுமில்லை. யாரோ சிகரெட் குடித்துவிட்டு நெருப்பை அணைக்காமல் வீசியதால் எங்கள் சாமான் கிடங்கில் தீ பிடித்து விட்டது. ஒரு நிமிஷத்தில் தீ பரவி ஏகப்பட்ட சேதம்..."

"சொன்னால் கேட்டீர்களா! இதை அடியுடன் ஒழிக்கும் வரை நீங்கள் இங்கே வர வேண்டாம் என்று கடிதம் எழுதுவதாக இருந்தேன். அதற்குள் நீங்கள் வந்து விட்டீர்கள்!"

"பொறு பொறு, எங்கள் மேலதிகாரியே 'இந்தச் சனியனால் எவ்வளவு நாசம். ஒரு ஆள் வேறு விபத்திலே சிக்கி ஆஸ்பத்திரியிலே சேர்க்க வேண்டி வந்து விட்டது' என்று கூறி இனிமேல் யாரும் சிகரெட் பிடிக்கக் கூடாது என்று கண்டிப்பான உத்தரவு போட்டு விட்டார். உத்தரவை மீறுபவர்களுக்கு அபராதமும் தண்டனையும் கிடைக்கும் என்றார். நெருப்பில் சிக்கிக் கொண்ட அந்த ஆளைக் காப்பாற்றச் சென்ற பொழுதுதான் என் கையைத் தீ சுட்டு விட்டது. நானும் சிகரெட் பிடிப்பதை அடியோடு நிறுத்தி விட்டேன்" என்று கூறினான் ஹரன்.

விஜயம் குழந்தைபோல் சிரித்துக் கொண்டு, "நான் சொன்னால் கேட்பீர்களா! உங்கள் மேல் அதிகாரி உத்தரவு போட்டால் கேட்பீர்கள். எது எப்படியானாலும் நீங்கள் அதை விட்டது எனக்கு எவ்வளவு சந்தோஷமாக இருக்கிறது தெரியுமா! அளவுக்கு மீறிப் புகை பிடிப்பதால் தான் இருதய வியாதி வருகிறதாம்" என்றாள்.

"ஓஹோ நீ டாக்டரின் தங்கையா! இருதய வியாதியைப் பற்றிச் சொன்னாயே! என் இருதயத்தைப் பிடித்திருக்கும் வியாதி என்னவென்று கண்டு பிடி பார்க்கலாம்!" என்றான் ஹரன்.

"அது நான் சொல்லட்டுமா! உன் இருதய வியாதிக்கு 'விஜயத்தின் அன்பு' என்று பெயர். என் விஜயம்! நான் சொல்லுவது சரிதானே!" என்று சொல்லிக் கொண்டே வந்தார் கோபாலன்.

"போங்க, அண்ணா!" என்று கொஞ்சலாகக் கூறிக் கொண்டே உள்ளே ஓடினாள் விஜயம்.

சங்கீத அரங்கேற்றம்!



சென்ற 8-ந் தேதி யன்று தஞ்சாவூர் மேல வீதி ஸ்ரீ பங்காரு காமாட்சி அம்மன் சன்னிதியில் குமாரி வனஜா சகோதரிகளின் சங்கீத வித்யா அரங்கேற்று விழா சிறப்பாக நடந்தேறியது. மேற்படி விழாவுக்குத் தலைமை வகித்த பங்களூர் ஸ்ரீமதி நாகரத்தினம்மாள் அவர்கள் சகோதரிகளை ஆசீர்வதித்து விட்டு குமாரிகளுக்கு இவ்வளவு திறமையாகப் போதித்த சங்கீத பூஷணம் ஸ்ரீ பீ. வி. கணேச ஐயரின் திறமையை வெகுவாகப் பாராட்டிப் பேசினார்.

